# இம் மின் இதழில் ...



*வணக்கம் நண்பர்களே*

*கார்த்திகை மாக மின் இதழ் மூலம் தங்கள் அனைவரையும் சந்திப்பதில் மிகவும் மகிழ்கிறோம்.*

*அனைவருக்கும் இனிய ஆங்கில புத்தாண்டு நல்வாழ்த்துகள்,*

*2014 ஆம் ஆண்டு தங்கள் வாழ்வில் முன்னேற்றம் தரும் ஆண்டாக அமைய வாழ்த்துகள்!*



# தமிழ் தளங்களும் களைகளும்....

பூங்கோதை

சில வாரங்களுக்கு முன்னரே இந்தப் பதிவை எழுதத் திட்டமிட்டிருந்த போதிலும், கடந்த சில நாட்களாக முன்னர் வெளிப்படை அரட்டையில் (Public Chat) நான் அவதானித்த சில விடயங்களும் மனதை நெருடுவதாக இருக்கவே, உடனடியாக இதை எழுதலாம் என முடிவெடுத்தேன்.

சமூக வலைத்தளங்கள் எமக்கு பல வகையிலும் நன்மை பயப்பதாகவே உள்ளது. எனினும் நாம் அதை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்தே அதன் விளைவுகள் நமக்கு கிட்டுகின்றன. சாதாரணமாக நாம் வாழும் சமூகத்தில் எம்மைச் சூழ நல்லவர்கள் மட்டுமன்றி தீயவர்களும் இருக்கவே செய்கிறார்கள். சமூகத்தில் நாம் நேரடியாகப் பழகும் நபர்களே இப்படி இருக்கும் போது, சமூக வலைத்தளங்களில் முகம் தெரியாமல் பழகும் நபர்களில் கெட்டவர்களுக்குப் பஞ்சமே இருக்காது என்பது அனைவரும் புரிந்து கொள்ளக் கூடிய ஒன்றே.

அந்த வகையில் வலைத்தளங்களில் பெண்கள் பலரும் சில நாகரீகமற்ற ஆண்களினால் தொல்லைகளுக்கு உள்ளாவது தவிர்க்க முடியாததே. ஆனால், சகோதரிகளே... தோழிகளே....

எங்களைப் பாதுகாக்க மற்றவர்கள் வரவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. எம்மை நாம் தான் பாதுகாக்க வேண்டும். ஒருவரோடு பேசும் போது ஆரம்பத்தில் எல்லா ஆண்களுமே மிகவும் நாகரீகமாகப் பேசினாலும் அவர் தப்பான ஒருவரா என்பதை அடுத்த சில சம்பாசனைகளில் புரிந்து கொள்ள முடியும். சில வார்த்தைகளேனும் மனதை நெருடும் வகையில் ஒருவர் பேசினால், அப்பொழுதே சுதாகரித்துவிட வேண்டியது உங்கள் பொறுப்பு. அப்படி ஒருவர் தவறான விதத்தில் பேசுகிறார் என்று நீங்கள் உணர்ந்தால் அவருக்கு சந்தர்ப்பம் கூடக் கொடுக்கத் தேவை இல்லை. உடனேயே அவரை உங்கள் நட்புவட்டத்தில் இருந்து நீக்கவும் தடை செய்யவும் முடியும். நீங்கள் இத்தகையவர்களுக்குப் பயந்து முடங்கிப் போக வேண்டிய அவசியம் இல்லை. எத்தனை பேர் வந்தாலும், எத்தனை மாற்றுப் பெயர்களில் வந்தாலும், அவர்களை உதறித்தள்ளி விட்டு நீங்கள் என்ன நோக்கத்தில் இணையத்தில் வந்தீர்களோ அதை செவ்வனே செய்து கொண்டே இருங்கள். தேவையானால், வேறு தோழிகளின் உதவியை நாடுங்கள். ஆதாரங்கள் இருக்குமாயின் தள நிர்வாகத்திடம் முறையிடுங்கள். இந்தத் தகவலை/ ஆலோசனையை நான் சொல்வது இணையத் தளங்களில் புதிதாக நுழைந்து, சில நடத்தை கெட்ட ஆண்களின் இத்தகைய பேச்சுக்களால் மனமுடைந்து, மன உளைச்சலுக்கு ஆளாகி, இணையத் தளமே வேண்டாம் என நிறுத்தி விடும் சகோதரிகளுக்காக மட்டுமே.

மேற்குறிப்பிட்ட சகோதரிகளை விட வேறு வகையான சில சகோதரிகளுக்கும் சில விடயங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

சகோதரிகளே.. பெண்ணாக இருந்தும் இப்படி நான் சொல்வதற்கு முதலில் மன்னிக்கவும். இன்னும் சில பெண்கள் அப்படிப்பட்ட ஆண்கள் நாகரீகமின்றிப் பேசுவதற்கு அனுமதிக்கிறார்கள் என்றே சொல்ல வேண்டும். 'அப்படி'ப் பேசுவதை இவர்கள் ஒருவகையில் விரும்புகிறார்கள். ஆனால் ஒரு அளவுக்கு மேல் அதை அனுமதிக்க முடியாமலோ அல்லது அவர்களுடைய ஏதாவது எதிர்பார்ப்பு நிறைவேறாமலோ தான் பயன்படுத்தும் இணையதளங்களை விட்டு வெளியேறும் இவர்கள்

*காக்கை தூக்கிய வடை*
*நீ வைத்திருப்பாயா ..?*
*தவறவிடுவாயா..?என்ற*
*ஏக்கத்தில் நான்...!!!*

*நரிக்கு*
*எட்டாத திராட்சை நீ*
*புளிக்கும் என்று போக*
*முடியவும் இல்லை*
*எட்டுகிறாயும் இல்லை ...!!!*

*இரண்டுபேரும் ஊதிய*
*இதயபலூன் -நீ*
*அளவுக்கு மீறி ஊதி*
*வெடித்த பலூனை பார்த்து*
*சிரிக்கிறாய் ....!!!*

*கே இனியவன்*

தன்னிடம் பேசிய நபரின் மீது மட்டுமல்லாது அந்தந்த தளங்களின் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டு, தாமாகவே அந்தத் தளத்துக்கு எதிரான பரப்புரைகளில் ஈடுபடுகின்றனர்.

மேற்குறிப்பிட்ட விடயத்தை இல்லையென்று மறுப்பவர்களுக்கு ஒரு கேள்வியை முன்வைக்கின்றேன். உண்மையில் ஒரு தளத்தில் தப்பான ஆண்களால் மனமுடைந்து வெளியேறும் ஒரு பெண் இன்னுமொரு இணையத்தளத்தில் இயங்க முடியாது. ஏனென்றால் எல்லா இடத்திலும் இத்தகைய ஆண்கள் இருக்கவே செய்கிறார்கள். உதாரணமாக, ஃபேஸ்புக்கில் இல்லாத அயோக்கியர்களா?... ஆனால் எத்தனை பெண்கள் இன்னும் அங்கே உலாவுகிறார்கள்... எனக்கு அத்தகைய ஆண்களின் தொடர்பைத் தவிர்க்கத்

தெரியவில்லை என்பதற்காக ஃபேஸ்புக் வலைத்தளமே தவறானது, கெட்டது என்று நான் சொல்வது எந்தவகையில் நியாயம்?

பேஸ்புக்கிலும் கூகிளிலும் இருப்பதைப் போலவே மற்ற பல தமிழ் தளங்களிலும் பெண்களை குறிவைத்து பேசக்கூடியவர்களும் ஆண்களுடன் பேசுவதற்காகவே வரும் பெண்களும் இருக்கிறார்கள் என்பதை மறுக்க முடியாது. அவர்கள் தனக்கான ஆசையை அல்லது தேவையை நிறைவேற்ற இணையத்தையோ வளர்ந்து வரும் தொழில் நுட்ப வசதிகளையோ பயன்படுத்திக்கொள்கிறார்கள் என்றே கூற வேண்டும்.

ஆனால் இவ்வாறான வசதிகள் பெருக பெருக தன்னை பாதுகாத்துக்கொள்ளும் வசதிகளும் பெருகி வருகின்றன என்பது தான் உண்மை.

தமிழ் தளங்களைப் பொறுத்தவரை பலவகையான தளங்கள் இருப்பினும் அவற்றில் நல்ல தளங்களை தெரிவு செய்து அவற்றில் எழுதி நம் எழுத்துத்திறமையை வளர்க்கலாம்.

பேஸ்புக் போன்ற சமூக தளங்கள், பல்சுவை தளங்கள், எழுத்தாளர்கள் எழுதும் பதிவுகளைத் தாங்கி வரும் இணைய இதழ்கள், செய்தி தளங்கள், அரட்டைக்காக என்றே இருக்கும் தளங்கள், தனிநபர் எழுதும் வலைதளங்கள், சினிமாக்களையும் பாடல்களையும் முறைகேடாக இணையத்தில் வெளியிடும் தளங்கள், குழுமங்கள் அல்லது மன்றங்கள் (Forums), ஆபாச தளங்கள் என ஓரளவு தளங்களை வகைப்படுத்த முடியும்.

இவற்றில் சமூக தளங்கள், மன்றங்கள், அரட்டைகள் இவற்றில் தான் பெண்களுக்கு எதிராக பல நிகழ்வுகள் அதிகம் நிகழ்கிறது. அவற்றை எளிதில் தடுப்பதும் இயலாததாக இருக்கிறது. வலைதளங்களில் நடப்பது அதிகமாக தனிநபர்கள் போடும் குடுமிச்சண்டையாகவே இருக்கிறது. அதனால் அதிலிருந்து வெளிவருவது மிக எளிதான ஒன்றே.

ஆனால், சமூக தளங்களில் நாம் மட்டுமல்லாது நமது மற்ற நண்பர்கள், உறவினர்கள் என இருப்பதால் அங்கே ஒரு பிரச்சனை என்றால் நாம் கவனமாக கையாள வேண்டியிருக்கிறது.

சில தினங்களுக்கு முன்பு பேஸ்புக்கில் ஒருவர் பெண் ஐடியில் வந்து 'இன்னுமா தமிழ் நண்பர்கள் தளத்தில் இருக்கிறீர்கள்?' என்று கேட்டார். இத்தளத்தில் பலர் தன்னிடம் தவறாக நடந்துகொண்டதாகவும் புகார் அளித்தும் பயனில்லை என்று கூறினார். அத்துடன் தள நிர்வாகத்தின் மேலும் புகார்களை அடுக்கிக்கொண்டு போனார். இருபக்க நியாயமும் அறிவதற்காக பலரிடம் விசயங்கள் சேகரிக்க ஆரம்பித்தேன். அவரிடம் சிலர் தவறாக நடந்துகொண்டிருப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஏனென்றால் அந்த அனுபவம் எனக்கும் உண்டு. ஆனால் நிர்வாகத்திடம் சரியான ஆதாரம் காட்டியிருந்தால் அவர்களை தடுத்திருக்கலாம். நான் அவ்வாறு தான் சிலரை தடை செய்தேன். ஆதாரம் இல்லாமல் ஒருவர் சொல்கிறார் என்பதற்காகவே யாரையும் தடை செய்துவிட முடியாது, ஆனாலும் அவ்வாறு நடந்து கொண்டவர்கள் தற்போது தளத்தில் அதிகமான பங்களிப்பில் இல்லை என அறிந்தேன். முன்பு எப்போதோ நடந்ததை வைத்து இப்போதும் தளத்தின் மீது குறைசொல்லிவிட்டு வேறு தளங்களைப்பற்றியும் கூறும் போது தளத்தின் வளர்ச்சியை பொறுத்துக்கொள்ள இயலாதவர்கள் வேண்டும் என்றே தளத்தில் எழுதும் நபர்களை தளத்தை விட்டு விலகச்செய்வதற்காக இவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பது மட்டும் புரிந்தது.

நீண்ட நாட்களாக எனது தனிப்பட்ட வலைப்பூவில் மட்டும் என் படைப்புகளைப் பதிவு செய்து வந்த நான், சமூக வலைத்தளம் என்று முதன்முதல் காலடி எடுத்து வைத்தது தமிழ் நண்பர்கள் தளத்தில் தான். சுமார் ஒன்றரை வருடங்களாக இங்கே உலாவிக் கொண்டிருக்கும் எனக்கு இத்தகைய அனுபவங்கள் ஏற்படவில்லையா என்று கேட்கிறீர்களா?... நன்றாகவே அனுபவப்பட்டேன். முன்பு குறிப்பிட்டபடி நானும் இணையத்துக்குப் புதுவரவு என்பதால் மனமுடைந்து இணையத் தளமே வேண்டாம் என நினைக்கும்படி ஒரே நேரத்தில் தள உறுப்பினர்கள் மூன்று கேடுகெட்டவர்களின் தாக்குதலுக்கு உள்ளானேன். சில நாட்கள் தளப்பக்கம் வருவதையே நிறுத்தி விட்டேன்.

பின்னர் தான் என் மனதில் இந்தக் கேள்வி தோன்றியது. "நான் ஏன் அவர்களுக்குப் பயப்பட வேண்டும்? ஏன் என்னால் அவர்களை எதிர்க்க முடியாது? எதிர்க்கவே தேவையில்லை, அவர்களைத் தடை செய்ய வசதி இருக்கிறதே தடை செய்து விடலாமே..., தளத்தில் யாரோ ஒரு உறுப்பினர் செய்யும் தவறுக்கு நாம் ஏன் தளத்தை குறை சொல்லிக்கொண்டிருக்க வேண்டும், தேவையற்ற அனுபவத்தை தந்த அதே தளத்தில் இருந்தே பல நல்ல நண்பர்களையும் நான் பெற்றிருக்கிறேனே. அவர்களை ஏன் இழக்க வேண்டும்?"

இப்படியெல்லாம் சிந்தித்ததன் விளைவு ஒரு சிலரைப்பற்றி முறையிட்டு அவர்களது ஐடி தளத்தில் தடை செய்யப்பட்டு விட்டது. அதன் பின் தொடர்ந்தும் இன்று வரை இந்த தளத்தில் இயங்குகிறேன். அதற்குப் பின்னர் பிரச்சனை கொடுக்க வந்தவர்கள் எல்லாம் எப்படி என்னை விட்டுப் போனார்கள் என்றே தெரியாது.

தோழிகளே, உங்களுக்கு ஒன்று சொல்கிறேன்.

தனிப்பட்ட முறையில் ஒருவருடன் எப்படிப்பட்ட உறவை வைத்திருக்க வேண்டும் என்று தீர்மானிப்பது உங்களைப் பொறுத்தது. ஆனால், முட்டி மோதிக் கொண்டு வந்துவிட்டு தளத்தைக் குறை சொல்வதோ அல்லது ஏனைய பெண்களை தளத்தை விட்டு வெளியேறச் செய்வதோ உங்களுடைய இயலாமையையும் நாகரீகமற்ற செயலையுமே காட்டுகிறது. நாலு நாட்கள் ஒரு ஆண் நன்றாகப் பேசி விட்டால் அவர்களை நம்பி உடனேயே

தொலைபேசி இலக்கத்தையோ புகைப்படங்களையோ பரிமாறுவதை நிறுத்துங்கள். உங்களை நீங்கள் தான் பாதுகாக்க வேண்டும். உங்களை சுற்றி வளரும் களைகளை நீங்கள் தான் அகற்ற வேண்டும். ஒரு தளத்தில் உறுப்பினராகி அங்கே வரும் பெண்களுடன் அநாகரீகமாக பேசுபவர்களும், தளத்தை விட்டு வெளியே போயிருந்து அடுத்தவரையும் தளங்களையும் விமர்சிப்பவர்களும் தளத்தின் களைகளே என்றுதான் நான் எண்ணுகிறேன். இவை பேஸ்புக் கூகிள் போன்ற அனைத்து தளத்திற்குமே பொருந்தும்.

*உன் இதயம் என்ன?*

*ஷேர் ஆட்டோவா..?*

*அவ்வப்பொழுது என்னை இறக்கி ஏற்றுக்கிறாய்*

*- தமிழரசி -*

ஒவ்வொரு தமிழ் தளங்களும் ஒவ்வொரு தமிழ்ப் பற்றின் ஆதாரம், அது யாரோ முகம் தெரியாத தமிழ் விரும்பிகள் பலரின் முயற்சியும், பல படைப்பளிகளின் வளர்ச்சியும் முக்கியமாக தமிழின் நிலை என்பதை மறந்து, தங்கள் சுய இலாபங்களுக்காகவும், கோபதாபங்களுக்காகவும் ஒரு தளத்துக்கு எதிராகப் பரப்புரை செய்வதும், தளத்தில் இயங்கக் கூடிய பெண்களை அங்கிருந்து விலகும் படியாக விமர்சிப்பதும் மனச்சாட்சி உள்ளவர்கள் செய்ய மாட்டார்கள் என்றே நான் நினைக்கிறேன்.

தோழிகளே, உண்மை புரியாமல், அடுத்தவரின் சொற்களைக் கேட்டோ, அல்லது மனமுடைந்தோ இங்கிருந்து வெளியேறிய சகோதரிகள் உங்கள் தொடர்பில் இருந்தால் அவர்களுக்குப் புரிய வையுங்கள். தளத்துக்கு மீண்டும் அவர்கள் வரவேண்டும் என்பதே என் தனிப்பட்ட விருப்பம். ஆனால், அப்படி அவர்கள் வர விரும்பாவிட்டாலும் கூடப் பரவாயில்லை, வளர்ந்து வரும் தளத்தைப் பற்றிய தவறான விமர்சனங்களைத் தவிர்க்கச் சொல்லுங்கள். ஒரு தளத்தின் வளர்ச்சிக்கு உதவா விட்டாலும் கூடப் பரவாயில்லை, கட்டியெழுப்பப்பட்ட ஒரு தளத்தின் வீழ்ச்சிக்குக் காரணமாயிருக்காதீர்கள்.

**நல்ல தளங்களை தெரிவு செய்வதற்கு சில காரணிகள்:**

- தளத்தின் முக்கிய நோக்கம் என்ன என்பதை பாருங்கள். ஒரு தளத்தை பார்த்த உடனே அதில் போடப்பட்டிருக்கும் பதிவுகள், படங்களை வைத்தே ஓரளவு தளத்தைப்பற்றிய ஒரு உருவகம் மனதில் பதியும். அதை வைத்தே தளத்தை எடை போட்டுவிடலாம்.
- பல தளங்களில் நல்ல பதிவுகளுடன் ஆண்களை கவர்வதற்காகவே ஆபாச பதிவுகளும் வந்தவண்ணம் இருக்கும். சில மன்றங்கள் உடைய தளங்களில் ஆபாசத்தை வெளிப்படையாக பதியாமல் பாலியல் கல்வி என்ற பெயரிலும் இம்மாதிரி பதிவுகள் வரும். இம்மாதிரி தளத்தில் இருப்பவர்களுடன் பழக நேர்ந்தால் கவனமாக இருக்க வேண்டியது முக்கியம்.
- சமூக தளங்களிலும், குழுமங்கள், அரட்டை தளங்களில் எம்மாதிரி ஆட்கள் வருவார்கள் என்பதையே அவதானிக்க இயலாது. ஒவ்வொரு நாளும் புதுப்புது ஆட்கள் வருவார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி குணங்கள் கொண்டவர்கள் என்பதை மனதில் பதிய வைத்துக் கொண்டு பழகுவது நல்லது.
- ஆபாச தளங்கள், நடிகைகளின் படங்களை ஆபாசமாக வெளியிடும் தளங்கள் இவை எப்போதுமே கவனமாக கையாளப்பட வேண்டியவை. ஆனால் இங்கே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நான் சொல்லப்போவதில்லை, ஏனென்றால் இம்மாதிரி தளங்களுக்குள் நுழைபவர்கள் தங்களுக்கு தெரிந்தே தான் ஏதோ தேவைக்காக நுழைகிறார்கள். இம்மாதிரி ஆட்களிடம் மற்றவர்கள் தான் கவனமாக பழக வேண்டும்.
- பெண்களே, உங்களுக்கு அரசியலில் ஈடுபாடு இருந்தால் தைரியம் இருந்தால் மட்டும் அரசியல் விவாதத்திற்குள் தலையை விடுங்கள். ஏனென்றால் அரசியல் ஒரு சாக்கடை என்று சொல்லப்படுவது மட்டுமல்லாமல் அரசியல் விவாதங்களில் நாகரீகம் என்பது எந்த கணத்தில் யாரிடமிருந்து விலகும் என்பதை கணிக்க முடியாது. அது எப்போது வேண்டுமானாலும் நம்மை தாக்கலாம். இந்த வகையில், நமது சமூகத்தின் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டு எழுதப்படும் பதிவுகளையும் வரலாற்றை உண்மையை கூறுகிறேன் என்ற போர்வையில் திரித்து எழுதி நஞ்சை கலந்து பிரிவினை செய்யும் பதிவுகளையும் தாங்கி வரும் தளங்களையும் அடக்கலாம்.
- ஆண் பெண் கலந்து பழகும் இணைய விவாதங்களில் பெண்ணின் பிரச்சனைகள், பாலியல் சம்பந்தமான விவாதங்களில் வெளிப்படையாக பேசுவதை தவிர்க்கலாம். ஏனென்றால் இவ்வாறு பேசும் பெண்களுடன்

நட்பு கொண்டால் இவைபற்றி தன்னிடமும் அதிகமாக பேசுவாள் என்ற மனநிலையில் ஆண்கள் உங்களை எண்ண ஆரம்பித்துவிடுவார்கள்.

இறுதியாக,...

நாகரீகமின்றி பெண்களோடு பழகுகின்ற ............ களுக்கு (மன்னிக்கவும்.. கெட்ட வார்த்தையால் திட்டலாம் என்று தோன்றுகிறது. அப்படித் தோன்றுகிறவர்கள் உங்களுக்கு விரும்பிய சொல்லை வைத்து இடைவெளியை நிரப்புங்க.. மற்றவங்க கண்மணி, பொன்மணி இப்படி ஏதாவது போட்டு நிரப்பிக்கோங்க.. )

எங்கே விட்டேன்.. ஆங்... நாகரீகம் தெரியாத நண்பர்களே..... சாதாரணமாக சமூகத்தில் எல்லோரும் திட்டுவது போல "ஏண்டா....நீயெல்லாம் அக்கா தங்கச்சியோடு பிறக்கலயா? உன்னோட அம்மா கூட ஒரு பெண் என்றதை மறந்துட்டியா..." இப்படியெல்லாம் சொல்லித் திட்ட விரும்பல, ஏன் என்றால் அது சூடு சொரணை உள்ளவங்களுக்கு மட்டும் தான் உறைக்கும். நீங்கள் எல்லாம் மனிதர்கள் என்ற தரத்தை விட்டு இறக்கி மிருகங்களின் தரத்தில் கூட வைக்கப்பட முடியாதவர்கள்... அதையும் தாண்ண்ண்டி.... முகம் தெரியாது என்ற தைரியத்தில் பெண்களோடு வாலாட்டும் கோழைகள் நீங்கள். ஆனால் பெண்கள் எப்போதும் இப்படியே இருக்கப் போவதில்லை. என்றாவது ஒரு நாள் இதன் பயனை நீங்கள் அனுபவிப்பீர்கள்... அனுபவிக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். இதற்குமேல் உங்களோடு பேசி நான் நேரத்தை வீணடிப்பதை விட ஏதாவது பயனுள்ள வேலை பார்க்கலாம்...

எனவே தோழிகளே...

"எப்பொருள் யார் வாய்க் கேட்பினும்

அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்ற பொன்னான வாக்கியத்தை மனதில் கொண்டு இணைந்து செயற்படுவோம். களைகளை அகற்றிப் பயிர்களை வளர்ப்போம்... தளத்தில் உள்ள தோழிகளோடு ஒரு குடும்பத்தில் உள்ள சகோதரர்கள் போன்று பழகும், சகோதரிகளின் படைப்பாற்றலை ஊக்குவிக்கும் ஒவ்வொரு நண்பர்களுக்கும் என் மனம் நிறைந்த நன்றிகள். நீங்கள் எப்பொழுதும் தமிழ் தள வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பீர்கள் என்றே நம்புகிறேன்.

நட்புடன்
சிநேகிதி பூங்கோதை

# வயதுக்கு வந்த தீட்டு

நந்தகோபால்



*குருதியின் குரூரத்தில்*
*கரை ஒதுங்க போகும்*
*நாணல்கள் போல*
*பரிதவிக்கி போகின்றன*
*வயதுக்கு வந்த பின்னே*
*அவளின் பிதற்றல்கள்*
*மாற்றம் ஆகதான் போகின்றன*
*உயிர் எனும் அடையாளங்கள்,*
*தொலைக்கப்பட்டு....*

*வானில் நட்சதிரத்தினை போல*
*மின்னும் அவளின் பேச்சும் ,*
*கல கலப்பான சிரிப்பும்*
*அடங்கதான் போகின்றன....*
*"பொம்பள புள்ளைய நடந்துக்க"*
*சுற்றி உள்ளவர்களின் சீண்டலில்....*
*அவள்*
*இனி கவிதைக்கும்*
*கற்பனைக்கும்தானா*
*வாழ்தலில் இல்லையா?*

*குருதி எங்கும் சிந்தப்பட்டு*
*வாங்கப்பட்டதுதான்*
*சுதந்திரம் என்றால்*
*வெட்கப்பட்டு கொண்டே*
*கேட்கிறாள். அவள்,*
*இனி,சிந்தும் கண்ணீருக்கும்*
*குருதிக்கும் முதுகு வலிக்கும்*
*யார் அளிப்பார்கள் சுதந்திரத்தை??????*

*ஆங்காங்கே தீண்டபடும் உடல்கள்*
*இனி, பற்களை காட்டி*
*மாமிசமாய் எண்ணி மயங்கும்*
*வளர்ச்சியற்ற பிளாஸ்டிக்கு*
*பூவை போல் நறுமண பொருளுடந்தானா அவள்....*

*அழிப்பர்களா அளிப்பார்களா சுதந்திரத்தை??? .*
*இருப்பினும் காத்திருப்புக்கள்*
*தொடர்ந்த வண்ணமே இருக்கிறது....*

# கவிதைக்குறள்

செந்தமிழ்தாசன்



2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

*நற்கல்வி கற்று*
*நின்றாலும் அதன்பயன்*
*என்னென்பது அறிவாய்!*

*எங்கும் நீக்கமற*
*நிறைந்திருக்கும்*
*உலகின் முதல்வன்*
*உண்மை அறிவதனை*
*உளத்தில் உணர்த்தும்*
*மெய்யாய் நின்று*
*உருஅருவ மல்லாத*
*பகவன் நற்பாதம்*
*நாளும் தொழுது நிற்றல்*
*கற்றகல்விக்கு பயனாம்......*

3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

*நீர்நிறை தடாகத்தாமரை*
*நீர்குறை சேராகினும்*
*தன்பெருமை குன்றாது*
*அதன் தாள்கொண்ட*
*கருணையால்..*

*அன்பர் நெஞ்சத்தாமரை*
*ஆங்கே*
*பெருமைமிகும் இறைவன்*
*தாற்பாதம் சேர்ந்து*
*இடையறா சிந்தனை*
*செய்தே நிலவாழ்வில்*
*நீர்ந்து போய்விடா*
*முக்தியில் சேர்ந்திடுவரே......*

3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

*நீர்நிறை தடாகத்தாமரை*
*நீர்குறை சேராகினும்*
*தன்பெருமை குன்றாது*
*அதன் தாள்கொண்ட*
*கருணையால்..*

*அன்பர் நெஞ்சத்தாமரை*
*ஆங்கே*
*பெருமைமிகும் இறைவன்*
*தாற்பாதம் சேர்ந்து*
*இடையறா சிந்தனை*
*செய்தே நிலவாழ்வில்*
*நீர்ந்து போய்விடா*
*முக்தியில் சேர்ந்திடுவரே.*

4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

*உலகின் நடுவன்*
*உன்னத உயிர்ப்பிறவி*
*தந்தோன்-அவன்*
*ஆசை அறுத்தவன்*
*ஞாலம் முழுதிற்கும்*
*துலாக்கோல் முள்ளாய்*
*நடுவு கொண்டவன்......*

*விரும்புதலும் வெறுத்தலும்*
*இல்லாத அவனடிகள்*
*நெருங்கித்*
*தொழுது நின்றவர்*
*தான் பிறர் தெய்வம் யென*
*முவகைத் துன்பநிலை*
*வினைப்பயன் காரணமாய்*
*காலத்தால்*
*வருதல் நீங்கி இருப்பரே.*

# குறளின் குரல்!

வள்ளுவர்தம் வாய்மொழி, வரிவழியில் மாறுபட்டிங்கு...!

அறத்துப்பால் - பாயிரவியல் அதிகாரம் - 01. கடவுள் வாழ்த்து



சுந்தர் புருஷோத்தமன்

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

கல்தோன்றி மண்தோன்றா காலத்து மொழியதுவின்
முதலெழுத்து அகரமாம்!
சிகரமும் நகரமும் உடைத்தாய உலகுக்கும்
உலகாய உயிர்கட்கும் பயிர்கட்கும் முதலானான் பதி.

2. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

கற்ற கலையும் பெற்றறிந்த கல்வியும்
காயும் வெயிலில் காணும் கானலாம்,
பெற்றம் ஏறியே நல்லருள் நல்கிடும்
நாயகன் நற்சரண் பற்றாது போய்விடினே!

3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

மனமென்னும் அடியார்தம் மலர்தன்னில்
உறைகொள்ளும்
இறைதாள்கள் துதிப்போர்தம் மனப்பூவும் மணம்நாறும்
மறுப்பில்லை மறுப்பில்லை மகிழ்விங்கு வசமாகும்
நிலந்தன்னில் வாழ்வெய்தி வளமோடு நிலைப்பாரே!

4. வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

விருப்பில்லை, வெறுத்தானுமில்லை
அறத்தானவன் பாதம் அகத்தால் பணிவார்க்கு
வறுக்கும் வன்துன்பம் வாட்டா, வதைக்காதே.
சிறக்கும் சீரெல்லாமது பெருக்கும் பேறாமே!

5. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

நல்வினை தீவினை மயக்கமளிப்பன
தெய்வமென்பது மயக்கமறுப்பது
மயக்கமறுப்பதன் இருப்பது விழைந்திட
மயக்கமளிப்பது விழுந்திடுமாமே

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

அவயமைந்தின் அவாவினை யறுத்தான்
அன்பறன் யாவையும் அன்றே வகுத்தான்
வகுத்தவ னறனெறி வழியதைக் கொள்வார்
அழியாப் புகழதை நிலமிதில் வெல்வார்

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

ஒப்பாரும் மிக்காரு மில்லாதா னிணையடிகள்
தப்பாமல் உணர்ந்தேத்திப் பிறழாமல் நடப்போர்க்கு
நலிந்தொக்கும் பிறப்பென்னும்
பிணியென்னுந் துயராமே!

8. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

அறமென்னும் பேராழிக் கடலெந்தன் பெருமான் –
அவன்
பிறவாழிக் கடலென்னும் பெருந்துன்பம் களைவான்
அவனாற்றல் அறிவார்கள் மலர்த்தாள்கள் பணிவர்
-அதை
பணியாதார் பிறவாழிக் கடல்தன்னில் உழல்வார்

9. கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

பெருங்குண மனைத்தின் இருப்பிடத்தா னவன்
மணங்கமழ் திருவடி வணங்காத் தலையது
நற்சுவையறியா நாவிதழ், பிற புலன்
இருப்பினு மியங்கா திருத்தலைப் போலாம்

10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

பிறப்பு இறப்பிலான் பதமலர்ப் பற்றுவார்
பிறவிப் பிணியெனும் பெருங்கடல் நீந்துவர்
பிறப்பு இறப்பிலான் பதமலர்ப் பற்றிலார்
பிறவிப் பிணியெனும் வினையுளே யாழ்வரே!

# ஆழ நட்ட வாழை

*பசுந்திரா*

11 வயது நிரம்பிய கரனை பார்ப்பவர்கள் எட்டு வயதே மதிப்பார்கள். ஆனால் அவனோ அந்த 18 , 19 வயது இளைஞர்கள் மூவரின் பின்னால் கையில் ஒரு தடியை பாதையெங்கும் இழுத்து கோடு போட்ட படி நடந்துகொண்டு இருந்தான் .

அவனுக்கு நினைவு தொரிந்த இத்தனை வருடத்தில் இதுவே முதல் தடவையாக வேலைக்குப் புறப்பட்டு இருக்கிறான். பெரிதாக ஒன்றும் வெட்டிப் புடுங்கும் வேலை இல்லை இது ஒரு எட்டிப் புடுங்கும் வேலை. புடுங்குவதும் தேங்காய் மாய்காய் இல்லை வெறும் பூ. அவன் இந்த வேலைக்கு போக பல காரணங்கள் உண்டு ஆனால் ஒரு தகுதியும் இல்லை.

ஊரில் இருக்கும் போது அவனது தந்தை வாழை நாட்டுவதற்காக ஆழமான கிடங்கு வெட்டி நடுவே வாழைக் குட்டியை வைத்து இவனை பிடித்துக் கொள்ளும் படி கூறி மண்ணை போட்டு மூடுவார் . வாழைக் குருத்து அவனது வண்டியோடு முண்டிக்கொண்டு நிற்கும் புதிதாக வரும் குருதுக்களை விரியமுன் கிழித்து விடுவதில் பேரானந்தம் அடைவான்

ஒரு நாள் " ஏனப்பா இவ்வளவு ஆழமாக கிடங்கு வெட்டி நடுகிறீர்கள் சின்ன சின்ன கிடங்கு வெட்டி நடலாமே ?" என்று கேட்டதற்கு

–" வாழை ஆழ நடு தென்னை தெரிய நடு" –

என்று தந்தை கூறிய வேத வாக்கை நம்பி இந்த வாழைப் பொத்தி பிடுங்கும் வேலைக்கு சேர்ந்து கொண்டான். ஆனாலும் வாழையை நினைக்க வயிற்றை கலக்கிக் கொண்டு வந்தது . அப்பாவிற்கு தொரிந்தது இங்குள்ளவர்களுக்கும் தெரிந்து இவர்களும் வாழையை ஆழ நாட்டிருந்தால் மட்டுமே வாழைப் பொத்தி இவனுக்கு எட்டும்.

'ஒரு வேளை வாழைப் பொத்தி எனக்கு எட்டாவிட்டால் என்ன செய்வது எதற்கும் முன்னே போகும் ஒருவரிடம் ஒரு வார்த்தை கேட்டு விட்டால் என்ன.' என்று எண்ணுகையில் தம்பி நமாவின் வாடிய முகம் கண்முன் தோன்றியது.

'பெரிதாக என்ன வந்து விடப்போகிறது – ஒன்றில்

" சீ..... நீ இந்த வேலைக்கு சரி வர மாட்டாய் போய் கொஞ்சம் வளர்ந்தாப்பிறகு வா "

என்று சொல்லுவார்கள். அல்லது "இந்த சின்னப் பயலை ஏனடா கூட்டிவந்த நீங்கள் " என்று இதோ முன்னுக்குப் போகிறார்களே இவர்களுக்கு பேச்சு விழும் அவ்வளவுதான். ஆனால் அவர்களோ அதுபற்றி எந்த கவலையும் கொண்டதாக தெரியவில்லை தன்னையும் அவர்களில் ஒருவனாக நினைத்து வேலைத்தலம் நோக்கி நடந்து கொண்டு இருக்கிறார்கள் நானாக ஏன் குட்டையை குழப்புவான்' என்று மௌனமாக இருந்து விட்டான்.

முன்பு தந்தையின் விரலைப் பிடித்துக்கொண்டு நடக்கும் போது சிறிது தூரம் நடந்தாலே "கால் நோகுதா ? " என்று கேட்டு விட்டு தூக்கி தோழில் சுமந்து கொண்டு நடப்பார். அது எல்லாம் என்றோ ஊரோடு முடிந்து விட்டது.

கரனுக்கும் அவனது தம்பி நமாவிற்கும் ஏழு வயது வித்தியாசம் அதனால் கரனுடன் கூட விளையாடுவதற்கு வீட்டில் யாரும் இல்லை. சில சமயங்களில் மூன்று வயதான தம்பியையும் நாயைக்குட்டியையும் சேர்த்து விளையாடுவான். நாய் இவனை திரத்தும் பின் இடை நடுவில் நாய்குட்டி தம்பியை திரத்த அவன் விழுந்து எழும்பி வீரிட்டுக் கத்தி இறுதியில் அம்மா தடியோடு இவனை திரத்தி வருவதுடன் அந்த விளையாட்டு முடிவுக்கு வரும்.

ஒரு வருடத்திற்கு முன் வவுனியா பூவரசங்குளத்தில் இருந்து நாட்டுப் பிரச்சனையால் இடம் பெயர்ந்து ஓமந்தை பாடசாலைக்கு வந்த போது கரனின் சந்தோசத்திற்கு அளவே இல்லை. எத்தனை நண்பர்கள் . பலரது பொயர்களைக்கூட ஞாபகத்தில் வைத்திருக்க முடியவில்லை பூவரங்குளம் கிராமமே அந்த பாடசாலையில் தானே தஞ்சமடைந்து இருந்தது.

### *காற்றோடு நான்*

*கவலையில்லை எனக்கு*
*காற்றோடு நான் கைகோர்த்து செல்வேன்*
*கற்பனையுண்டு எனக்கு*
*கவின் நீல வானத்தை கண்டு ரசிப்பேன்*
*மலரோடு கன்னம் தேய்த்து*
*மகிழ்ந்து நான் உறவாடுவேன்*
*கனவுகள் விரியும் இரவின்*
*துயில் கலைக்க மறந்திடுவேன்*
*நேற்றைய சிந்தனைகளும் இல்லை*
*நாளையக் கவலைகளும் எனக்கில்லை*
*இன்றோடு சிரித்து மகிழ்ந்திடுவேன் !*

*~~~ கல்பனா பாரதி ~~~*

பாடசாலை , வீட்டுப்பாடம் , சாப்பாடு , கொஞ்ச நேரம் விளையாட்டு என்ற வழக்கம் அகதி முகாமிற்கு வந்ததும் தலை கீழாக மாறி : விளையாட்டின் நடுவிலே ஓடிப்போய் சாப்பிட்டு விட்டு வந்து மீண்டும் விளையாட்டை முழுநேரமாக செய்து கொண்டு இருந்தான். வேறு எந்த வேலையும் இல்லை. இவ்வளவு ஏன் அம்மா அப்பா கூட அரை வாசி நேரம் வகுப்பறை வாசலில் இருந்தபடி இவர்களின் விளையாட்டைத்தானே பார்த்தக்கொண்டு இருந்தார்கள். ஆனால் அந்த வாழ்க்கையும் அப்பா பூவரங்குளத்தில் இருந்த அவர்களது வீட்டை பார்க்கப்போய் திரும்பி வராமல் காணாமல் போனதில் இருந்து தொலைந்து போனது அன்றில் இருந்து அம்மாவும் ஒடிந்து போய் அடிக்கடி நோயில் படுத்தார். தம்பியை இடுப்பில் வைத்தபடி மற்றவர்கள் விளையாடுவதை

அவ்வப்போது எட்டிப் பார்ப்பான்.

ஓமந்தையிலும் இருக்கமுடியாமல் மீண்டும் இடம் பெயர்வு. இடம் பெயர இடம் பெயர இருக்கம் பொருட்களும் ஒவ்வொன்றாக அவர்களை விட்டு இடம் பெயர்ந்தது. தந்தை தூக்கி வந்த சில பாரமான பொருட்களை தாயால் கொண்டு வர முடியாமல் போக அங்கேயே விட்டு விட்டு கிளிநொச்சியில் உள்ள -கோணாவில் காந்திக் கிராமம் - எனப்படடும் இந்த அகதி முகாமிற்கு வந்து சேர்ந்து இரண்டு மாதம் ஆகிறது.

இங்கே அகதி சாமான் என்று அரிசியும் பருப்புமே தருவார்கள் மீதி எல்லாம் கடையிலேயே வாங்க வேண்டும் . வீட்டில் ஆம்பிளை உள்ளவர்கள் அயல் அட்டையில் வேலைக்கு போவார்கள். அம்மாவும் அவ்வப்போது எதாவது வேலைக்குப் போய் வருவார். கடந்த ஒரு மாதமாக அவரால் முற்றாக முடியாமல் போய் விட்டது.

அம்மாவிற்கு அம்மாள் வருத்தம் (சின்ன முத்து ) உடல் நிலை மேலும் மோசமாகியது. தம்பி அம்மாவிற்கு கிட்டையும் போக முடியாது வருத்தம் தொத்தி விடுமாம். அவரால் எழுந்திருக்கவே முடியவில்லை இதில் சமைப்பது எப்படி. வீட்டில் அரிசி சேடம் இழுக்க பருப்பு உயிரை விட்டிருந்தது. அதனால் அம்மா சொல்லச் சொல்ல இவனே கஞ்சி காச்சுவான்.

அந்த வெறும் கஞ்சியிலேயே மூவரின் உயிரும் தங்கி நின்றது.
கஞ்சி என்றால் தம்பி நல்லா குடிப்பான். ஆனால் ஒருக்கா மூத்திரம் போய் வந்து விட்டால் மீண்டும் அழ ஆரம்பித்து விடுவான் . அம்மாவும் அந்த கஞ்சியோடயே நாள் முழுக்க பாயில் கிடக்கிறார். சில சமயம் காச்சல் வாய்க்கு குடித்த கஞ்சியையும் சத்தி எடுத்து விடுவார்.

ஒவ்வொரு நாளும் அம்மாவின் அம்மை வருத்தத்திற்கு முத்து மாரியம்மன் தாலாட்டு பாட வரும் நாலாம் கொட்டிலில் வசிக்கும் அருமைநாயகம் ஐயா 'ஏதாவது நல்ல சாப்பாடாய் சாப்பிடு பிள்ளை' என்று சொல்லி விட்டுப் போகிறார். ஆனால் அதற்கு கையில் காசு இருக்க வேண்டுமே.

முகாமிற்கு முன்னால் இருக்கிற கொட்டில் கடையில் பாண் பணிஸ் இடியப்பம் என பல வகை வகையான சாப்பாடுகள் வரும் அம்மாவையும் தம்பியையும் நினைத்த படி அவற்றை பார்த்துக் கொண்டு நின்று விட்டு வருவான் கரன் . தம்பிக்கு பணிஸ் என்றால் கொள்ளை பிரியம் யாரும் வேண்டிச் சாப்படுவதை கண்டு விட்டால் காட்டிக் காட்டி அழுவான். பணிசுக்குப் பதிலாக காக்கா , குருவி , அணில் போன்ற வற்றை தேடித் தேடிக் காட்டுவான் கரன். ஓடும் அணிலைப் பார்த்தால் சிரிப்பான் அது ஒரு இடத்தில் நின்று விட்டால் அழுவான் .

இந்த நிலையில் தான் கரன் தானும் வேலைக்கு வருவதாக சேர்ந்து கொண்டான் . மண்ணில் வேலை என்றால் செய்யலாம் அனால் இது மரத்தில் வேலை அதுவும் கொப்பில்லாத மரத்தில் . இழுத்துக்கொண்டு வந்த தடியை மீண்டும் ஒருமுறை தூக்கிப் பார்த்துக்கொண்டான் . ஒரு வேளை இவன் பயந்தது போல வாழைப் பொத்தி எட்டாது போனால் இந்த தடியால் தட்டிப்பிடுங்கி விட வேண்டும் என்பது அவனது இன்னொரு திட்டம்.

கோணாவில் நல்ல செழிப்பான கிராமம் இந்த மண்ணில் எவ்வளவுதான் விழுந்து புரண்டாலும் உடலில் அழுக்கு பிரளாது வெள்ளை வெளேரென்ற மணல் மண். தோட்டத்திற்கு உகந்த மண் . அக்கராயன் குளத்து நீர் கோணாவில் கிராமத்தையும் சோலையாக்கிக் கொண்டு இருந்தது. நாலா புறமும் தென்னை ,பாக்கு, மா ,பிலா போன்றவற்றோடு வாழைத்தோட்டங்களும் வயல்களுமாக பச்சைப் பசேல் என்று இருக்கம்.

அவ்வப்போது அங்குள்ள வாழைதோட்டங்களில் பொத்தி , வாழைக்குலை , வாழையிலை பிடுங்கி ஸ்கந்தபுரம் சந்தையில் விற்பதற்கு என பலர் அகதி முகாமில் உள்ளவர்களை வேலைக்கு அழைப்பது வழக்கம். அப்படி நாலு போர் வேண்டும் என்று கேட்டதாலேயே கரன் தானும் வருவதாக கூறி வந்து விட்டான் .

முருகன் கோயில் தாண்டி இருந்த பெரிய வாழைத் தோட்ட சோலைக்குள் முன்னால் சென்ற மூவரும் நுழைந்தார்கள். கரனும் நுழைந்து படலையை சாத்திக் கொண்டான். படலையை தாண்டியதும் குறுக்காக ஒரு வாய்க்கால் சென்றது. இரவு அதனூடாக தண்ணீர் பாச்சியிருக்க
வேண்டும் வாய்க்காலில் சேறு படிந்திருந்தது. கொண்டு வந்த தடியை வாய்க்கால் நடுவே ஊன்றி எம்பி குதித்து மறு கரைக்கு தாவினான்.

கம்பு குத்தியபடி நின்றது கரனை காண வில்லை முன்னால் போனவர்களில் ஒருவன்
" கரன்... கரன் ..." என்று கூப்பிட்டான். உடம்பெங்கும் சேற்றுமண்ணுடன் வாய்க்காலில் இருந்து எழும்பினான் கரன். அவர்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை
" சும்மா கடக்கிற வாய்க்காலை ஏனடா கம்பு குத்திக்கடந்து விழுந்து எழும்புகிறாய்" என்று விட்டு உரப்பையை எடுத்துக்கொண்டு வாழை மரங்களை அண்ணாந்து பார்த்தபடி ஆளுக்கு ஒரு திசையில் நடந்தார்கள்.

வாழைக்கயர் படும் என சேட்டு போடாமல் வந்ததால் கணிமண்ணில் இருந்து சோட்டு தப்பியது என எண்ணியபடி பெரும் கஸ்டத்தின் மத்தியில் குத்திய தடியை பிடுங்கி எடுத்துக்கொண்டு முடிந்தவரை மண்ணை துடைத்து விட்டு காவல் கொட்டிலில் இருந்து ஒரு பையை எடுத்துக்கொண்டு வாழைப்பொத்திகளை தேடி நடந்தான் கரன்.

எந்த வாழை மரமும் அவனை வாழ வைப்பதாக தெரிய வில்லை. எட்டாத உயரத்தில் பொத்திகள் தொங்கின. ஒரு சில பொத்திகள் எட்டிய போதும் அவை பல காலங்களாக முறிக்காமல் விட்டு பூத்துக் கொட்டி பொத்தியும் சூம்பி வாழைக்காய் அளவிலேயே இருந்தது. அவற்றை முறித்து எறிய வேண்டுமே தவிர சந்தைக்கு கொண்டு செல்ல முடியாது.
அப்பா சொன்னது போல் - இங்கே எந்த வாழையையும் ஆழ கிடங்கு வெட்டி நட்டதாக

தொரிய வில்லை . கொண்டு வந்த தடியால் பொத்தியை குத்தி முறிக்கப் பார்த்தான் . பொத்தி மாட்டேன் என்று குலையோடு சேர்ந்து தலையை ஆட்டியது . வாழைக்குலையில் தடி குத்தி காயம் பட்டு காய் கண்ணீர் விட்டு அழுதது. சற்றே சரிந்து நின்ற ஒரு மரத்தில் இருந்து பகீரதப்பிரயத்தனத்தின் பின் ஒரு பொத்தி பிடுங்கி விட்டான். குறைந்தது 20 பொத்தி பிடுங்கினால் தான் அந்த பை நிறையும்.

அந்த ஒரு பொத்தியுடன் பையை இழுத்துக்கொண்டு எட்டாத பொத்திகளுக்கு கொட்டாவி விட்டபடி எட்டும் உயரத்தில் பொத்தி தேடி அலைந்தான். ஆனால் மற்றைய மூவரும் அரை வாசி பையை நிரப்பிவிட்டார்கள்.
இந்த ஒரு பொத்திக்கு என்ன கூலி தருவார்கள் அதைக்கொண்டு ஒரு பணிசாவது வாங்கிவிட முடியுமா என எண்ணியபடி நடந்தான்

ஒருவன் அவனிடம் வந்து பையை பார்த்து சிரித்து விட்டு
" எத்தனை பொத்தி புடுங்கினாய் கரன் ? " என்றான்.
“கனக்க பொத்தி கண்டு வச்சிருக்கிறேன் ஆனா ஒண்டுதான் புடுங்கினனான்” என்றான் தலையை பையினுள் ஓட்டி அந்த பொத்தியை பார்த்தபடி. வந்தவன் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரித்தான். பின் “இனி என்ன செய்யப்போகிறாய் ? ” என்றான்.
“ என்னை தூக்கிப் பிடிச்சால் மள மளவென்று பிடுங்குவேன் “ என்றான். அப்பா தூக்கிப் பிடிக்க பப்பாப்பழம் பிடுங்கிய ஞாபகத்தில். வந்தவன் ஓடியே விட்டான் .

பையை கீழே போட்டு விட்டு அதன்மேல் இருந்தபடி ‘என்னண்டு இந்த பொத்திகளை புடுங்கலாம்’ என ஒரு அழகிய பொத்தியை பார்த்துக் கொண்டு யோசித்தான். அந்த பொத்தியின் ஒரு இதழ் மெல்ல விரிந்து இருந்தது. உள்ளே வாழைப்பூவில் இருந்த தேனை குடிக்க முடியாமல் ஒரு வண்டு சற்றிச் சுற்றிப் பறந்தது கொண்டிருந்தது . ஏதோ சிந்தனையில் தோன்ற திடீரென எழுந்து அந்த மூவரையும் தேடி ஓடினான்.

அவர்கள் மூட்டையை சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு நடந்தார்கள்.
“உங்கள் மூவரினின் பைகளையும் ஓர் இடத்தில் வைத்துவிட்டு பொத்தியை பிடுங்கி என்னிடம் தாருங்கள் நான் ஓடி ஓடி அவரவர் பையில் போட்டு விட்டு வருகிறேன் நீங்கள் சுமக்க வேண்டிய அவசியம் இல்லை “ என்றான் மூச்சு வாங்கியபடி .

அவர்களுக்கும் அது நல்ல யோசனையாகவே பட்டது ஆனால் அதற்காக இவனுக்கு என்ன கூலி கொடுப்பது என்று யோசித்தார்கள். இறுதியில் எந்த முடிவிற்கும் வராமலே அவனிடம் பொத்திகளை முறித்து கொடுத்தார்கள் அவனும் ஓடி ஓடி அவரவர் பையில் போட்டுவிட்டு வந்தான். கூடவே வழியில் கண்ட பொத்திகளை அவர்களுக்கு கூப்பிட்டுக் காட்டினான் . சற்று நேரத்திலேயே மூவரினதும் அந்த உரப் பை நிரம்பி விட்டது.
நேரம் மதியம் மூன்று மணியாகிக் கொண்டிருந்தது அந்த மூவரையும் விட அவனே களைத்து விட்டான் காலை குடித்த கஞ்சி செமித்து பசி எடுத்தது.

அவனது பை மட்டும் அந்த ஒரு பொத்தியுடன் தவம் கிடந்தது. மூவரில் ஒருவன் “இனி முறிக்கும் பொத்திகளை உன் பையில் போடு” என்றான்.

கரனின் முகத்தில் முழுச் சந்திரன் பிரகாசித்தான். அவர்கள் முறித்து தந்த பொத்திகளை தனது பையினுள் போட்டான். இருந்தும் என்ன பயன் தோட்டத்தில் இருந்த பொத்திகள் முழுவதும் பறிக்கப்பட்டு விட்டது.

## குழந்தையின் குமுறல்

*ரத்ன தேவி*

*புட்டிப்பால் இல்லாமல்*
*துடிக்கிறது ஓர் உயிர்…*
*ஒட்டுத்துணி இல்லாமல்*
*தவிக்கிறது ஒரு மேனி…*
*தாய் இல்லை தாலாட்டு பாட…*
*தந்தை இல்லை தட்டிக் கொடுக்க…*
*அழுகிறது அம்மனம்…*
*எம்மனதிலும் மௌனம்…*
*அக்குழந்தை ஓரனாதை…*
*எடுப்பார் எவருமில்லை…*
*கேட்பார் யாருமில்லை…*
*அக்குழந்தையின் உயிர்…*
*காண்போருக்கோ வெரும்பயிர்…*
*கருதுகிறார்கள் துச்சமாக…*
*கடவுளுக்குத்தான் வெளிச்சம்!!!*

“ இவ்வளவுதான் இனி இல்லை வாங்கோ தோட்டக்காற ஐயா வரும் வரைக்கும் அதில போய் இருப்போம்”
என்றபடி ஒருவன் காவற்கொட்டிலை நோக்கி நடந்தான் . மற்றவர்களும் அவனை பின் தொடர்ந்து சென்றனர். கரன் ஒவ்வொரு வாழையாக அண்ணாந்து பார்த்தபடியே பின்னால் நடந்தான் . ஒவ்வெருவரும் தத்தம் மூட்டைகளோடு முதலாளிக்காக காத்திருந்தார்கள். கரனின் பையில் ஆக எட்டு பொத்திகளே இருந்தது .

தோட்டக்காரரும் வந்தார்
“எத்தனை மூட்டை ? ” என்று கேட்டார். அந்தக் குழுவின் தலைவன் “ மூன்று மூட்டை “ என்றான்.
“அந்தப் பையில் எத்தனை ? ” என்று கரனை பார்த்துக் கேட்டார்.
உற்சாகமான குரலில் “ எட்டு பொத்திகள் ஐயா ” என்றான் கரன்.

எல்லோருக்கும் பொதுவாக முப்பது ரூபாயை ஒருவனிடம் கொடுத்து விட்டு கரனின் பையில் இருந்த எட்டு பொத்திகளையும் ஆளுக்கு இவ்விரண்டாக பிரித்து எடுக்குமாறு கூறி விட்டு தோட்டக்காரர் சென்று விட்டார்.
கரன் மாறி மாறி மூவரின் முகத்தையும் பார்த்தபடி நின்றான்.

“இந்த மூன்று மூட்டைக்கும் தான் முப்பது ரூபாய் தந்திருக்கிறார் . கரன் அந்த எட்டுப் பொத்தியையும்

நீயே எடுத்துக் கொள் எங்களுக்கு வேண்டாம் நாங்கள் காசை பிரித்து எடுத்துக்கொள்கிறோம் ” என்றான் குழுவின் தலைவன். கரனின் பணிஸ் கனவு மெல்ல கரைய ஆரம்பித்தது கண்கள் நீரரும்ப தொண்டை வரை துக்கம் முட்டியது ஓ என்று அழுது விட வேண்டும் போல் இருந்தது . எதையும் காட்டிக் கொள்ளாமல் சரி என தலையை ஆட்டி விட்டு அந்த எட்டுப் பொத்தியோடு வீடு வந்தான்.

களி மண் உடலெங்கும் புரண்டபடி வாழைப் பொத்தியுடன் வந்த மகனைப் பார்த்து படுக்கையில் கிடந்தபடியே கண்ணீர் வடித்தார் அம்மா.

அன்று முளுவதும் தம்பியை பார்த்துக்கொண்டு இருந்த பக்கத்து வீட்டு அக்காவிடம் ஒரு பொத்தியை கொடுத்தான். அம்மாவுக்காக மாரியம்மன் தாலாட்டு பாட வரும் ஐயாவுக்கும் ஒரு பொத்தியை கொடுத்தான் . இரண்டு பொத்திகளை வீட்டில் வைத்து விட்டு . மீதி நான்கு பொத்திகளுடனும் அந்த பெட்டிக் கடையை நோக்கி ஓடினான் .

கடையில் இருந்த அந்த கண்ணாடிப் பெட்டியில் இன்னமும் மூன்று பணிஸ் மீதியாக இருந்தது . அந்த பெட்டியையும் தன் கையில் இருந்த பொத்தியையும் கடை முதலாளியையும் மாறி மாறி பார்த்தபடி நின்றான்.

“என்னடா வேணும் ? ” என்றார் முதலாளி. எதுவும் பேசாது ஊமையாக நின்றான். மீண்டும் சற்று உரத்த தொனியில் “என்னடா வேணும் ? ” என்றார் முதலாளி. அவரது பெறுமாத வண்டியை பார்த்த படியே “ உங்களுக்கு வாழைப்பொத்தி வேணுமா ? ” என்று கேட்டான்

“ எங்க காட்டு பாப்பம் “ என்றார். பையை எட்டிக் கொடுத்தான் .

“பறவாய் இல்லையே பொத்தி வாடாம நல்லாத்தான் இருக்கு இப்பதான் புடுங்கி இருக்குப்போல சரி என்ன விலை ? “ என்றார்.

அவன் அந்த கண்ணாடிப் பெட்டி பணிஸையே பார்த்தபடி நின்றான். நான்கு பொத்திகளையும் எடுத்து முட்டைக்கோவாவிற்கு அருகில் வைத்தது விட்டு பையை அவனிடம் கொடுத்தார். பின் ஒரு பொத்திக்கு இரண்டு ரூபா வீதம் எட்டு ரூபா காசை மடித்து அவனின் உள்ளங் கையில் வைத்தார். அவனின் கண்கள் அந்த கண்ணாடிப் பெட்டியை விட்டு அகலவில்லை காசோடு கையை மேசையில் வைத்தபடி சிலையாய் நின்றான்.

முதலாளி அந்த மூன்று பணிசையும் ஒரு சரையில் சுத்தி அவனிடம் கொடுத்து விட்டு.

“ உன் பொத்திக்கு இதை விட நல்ல விலை யாரும் தர மாட்டார்கள் ” என்று கூறினார்.

பையை கமக்கட்டில் வைத்துக் கொண்டு இரு கையிலும் இருந்த பணிசையும் காசையும் மாறி மாறி பார்த்தபடி வீடு நோக்கி ஓடினான்.

முற்றும் .

## சேர்ந்து நில் விடிவு வரும்

*கிரிகாசன்*

*மலர் தூங்கும் பனி மண்ணில் வீழும் - பூ*

*மணம் ஏந்தி இளந்தென்றல் அலைந்தோடக் காணும்*
*புலர்கின்ற பொழுதான யாவும் - நம்*
*பொன்னான தாய்மண்ணின் புதுமை என்றாகும்*
*சிலர்வந்து தாய்நிலம் பற்றி - எம்மைச்*
*செல்லென்று காட்டிடை சிறையிட்டு வைத்தால்*
*இலதென்று ஆகுமோ வீரம் - நாமும்*
*இருந்தழும் நிலை காண மீளுமோ தேசம்*

*கலை ஒன்றித் தமிழ் இன்பம் காணும் - நற்*
*கனி போலும் சுவை எங்கள் தமிழீழ வாழ்வும்*
*உலைபொங்கும் வயல்கொண்ட நெல்லும் - விதை*
*உழவர்தம் வியர்வையும் உதிர்கின்ற மண்ணும்*
*நிலை கொண்ட எம் தேசம் வேண்டும் - அதை*
*நீர்வார்த்து தருமமென் றளிக்கவா நானும்*
*மலைபோன்று இடர் வந்தபோதும்- நாமும்*
*மறுபடி கொள்வோமோ எமதன்னை நாடும்*

*சிலபூக்கள் குளம் தன்னில் ஆடும் - அதில்*
*சிந்தாமல் வண்டொன்று தேனுண்டே ஓடும்*
*வலைதன்னில் மீன்வந்து வீழும் -அதை*
*வாரிக் கரைபோட்டு விலைகூறு வோரும்*
*தலை சீவிப் பூச் சூட அன்னை - அவர்*
*தாயாம் என் பாட்டியின் கதை சொல்லும் தன்மை*
*நிலைகொண்ட நாம் வாழ்ந்த மண்ணை - இன்று*
*நீசர்தம் கைவிட்டு மீட்பதே வேலை*

*தொலை என்று வந்தாலும் பகைவன் - அவன்*
*துண்டுதுண்டாய் ஆக்கத் துணைநின்ற உலகம்*
*மலை போலும் தமிழ் வீர மாந்தர் - இவர்*
*மாளென நஞ்சிட்டுக் கொன்றதோர் கோலம்*
*குலைகுலை யாகவே வெட்டி - அவன்*
*கும்மாளம் போட்டாடக் குவலயம்சுற்றித்*
*தலை கீழென் றுருண்டோடும் பூமி - நாமும்*
*தருமத்தைக் கேட்டிட எவருண்டு மீதி*

*மொழி ஒன்று தமிழ் எங்கள் அன்னை - இதை*
*மறப்பதோ ஒன்றாகு, மதியூகம் கொண்டே*
*வழி கண்டு சென்றிட வாழ்வாம் -நூறு*
*வகையான வழிகாணில் பிரிவொன்றே மீதாம்*
*தெளிகின்ற மனதோடு உறுதி - அதை*
*தேர்ந்து நீ சரியான திசைகண்டு சென்றால்*
*பழி வென்று தீர்வாகி விடியும் - நீயும்*

*பயமின்றி வாழ ஓர் விடியலும் தோன்றும்.*

# மௌனங்கள் உயிர்த்தெழுந்தால்

பகுதி 22

மணிகண்டன்




காகித திருவிழாவில்
நின் விழிக்கு முன்மொழிந்த கவிதைகளை
மணிமகுடமென வெற்று காகிதங்கள்
ஏழாம் புன்னகையுடன் சூடிக்கொண்டனவாம் !



பாகற்காயும் மூன்று விரல் தாங்கி
ஆள்காட்டி விரல் அனைத்து
கட்டை விரல் முட்டு கொடுத்து
அமுதூட்டுகையிலே பஞ்சாமிர்தம் ஆயினவே !



செவ்வாய்க்கும் வழி பிடித்து
செயற்கைகோள் ஒன்றை ஏவியாச்சு
செவ் வாய்க்கு மேலிருக்கும் விழியடைய
வழி தேடி கவிதைகள் தாங்கிய காகித
செயற்கைகோள் ஒன்றை அனுப்பியிருக்கிறேன் !



நீ அணிந்து வந்த தாவணி கண்ட
வண்ணத்துப்பூச்சியின் தென்காசி பட்டண இளவரசி
பொதிகை ஆடை கடை சென்று மொத்த
ஆடைகளையும்
ஒரு புரட்டு புரட்டிவிட்டு அதுபோல் இல்லையென
மலரினோடு சண்டையிட்டு மௌனமாய் இருக்கிறதாம் !



உனக்கென எழுதி தந்த கவிதைகளை படித்த பின்பு
வெற்று காகிதமாய் திரும்ப வருகிறது
நீ படித்த பின்பு காகிதத்தில் படிந்திருக்க
எங்ஙனம் அவற்றாலும் முடியும் !



எண்களில் சுழியம் மட்டும்
வளையல்களாக நின் கை சேர்த்தாய்
மற்றவை உயர்மட்ட குழுயொன்றை கூட்டி
அணிகளன்களோடு பேச்சுவர்த்தை நடத்தி வருகிறதாம் !



நின் விழிகளென்ன
இலை கூட உதிரா பூச்செடியோ
ஒரு பூவாவது எனக்கு திரும்ப கொடு
எல்லாம் பூக்களையும் வாங்கி மட்டும்
வைத்துக்கொள்கிறாய் !



எனக்கென்று உன்னிடம்
பெரியதாக ஒன்றும் கேட்க போவதில்லை
அதிகபட்சமாக எனது கவிதைகளையாவது
காதலித்துக்கொண்டிரு போதும் !



எனது பற்களின் நண்பன் நகத்தினை
எங்ஙனம் காய் நகர்த்தி
இங்ஙனம் நகவெட்டி கொண்டு வெட்டிக்கொள்ள
நாடகம் ஒன்றை நடைபெறச் செய்தாய்
ஒரு முறை எனது நகம் கடித்து பார்
உனது விழி குறிப்புகளை அங்குதான் சேமித்து
வைத்திருக்கிறேன் !



காதல் என்று உனது கையில் இருக்கும்
கத்திக்கும் என் மீது காதல் சற்று அதிகம் போல
சிறு துளையிட்டு பெரும் கவிதை தொகுப்பு ஒன்றை
வற்றாமல் ஓட விட்டுக்கொண்டிருக்கிறது !



# சாம்ராட் சம்யுக்தன்

*சிவாஜிதாசன்*

### பாவம் 2. 11. துன்ப அலைகள்




சில நேரங்களில் விதியின் விளையாட்டு மோசமானதாகத் தோன்றும். சம்யுக்தனை ஒற்றனாக அனுப்பி, பகைவன் மார்த்தாண்டன் தீட்டும் திட்டங்களைத் தெரிந்து, அவ்வப்போது வீரபுரத்திற்குத் தூது சொல்லுவான் என்று நினைத்திருந்த வீரபுர மன்னருக்கும் ராஜ குருவுக்கும் பெரும் இடி தலையில் இறங்கியது. மார்த்தாண்டன் அனுப்பிய ஓலையை ராஜ குரு படிக்க, மன்னர் சிலையென உட்கார்ந்திருந்தார். மணியம்மை குரூரப் பார்வையோடும், ரவிவர்மன் துக்கத்தால் விக்கித்துப்போயும் அரண்மனையின் ரகசிய அறையில் நின்றிருந்தனர்.

ராஜ குரு ஓலையைப் படிக்கும் ஒலியைத் தவிர வேறு எந்த அரவமும் கேட்காமல் அந்த அறையே துக்கம் சூழ்ந்தபடியிருந்தது.

"வீரபுர மன்னருக்கு,

நீங்கள் அனுப்பிய ஒற்றன் சம்யுக்தன் சிவபதவி அடைந்துவிட்டான். உங்கள் நாடு என் முன் மண்டியிடும் நாள் வெகுதூரத்தில் இல்லை. இனியும் ஒற்றர்களை அனுப்பினால், தேர்ந்தவர்களாக, என் அறிவுக்கு வேலை கொடுப்பவர்களாக அனுப்புங்கள். சிறு பிள்ளைகளை அனுப்பி வேவு பார்க்கும் அளவிற்கு நான் ஒன்றும் தரம் தாழ்ந்துவிடவில்லை." என்று முடித்திருந்தான் மார்த்தாண்டன்.

அதைப் படித்து முடித்த ராஜ குரு, மன்னரின் கவலை தோய்ந்த முகத்தை நோக்கினார். ராஜ குருவிற்கு சம்யுக்தனை அவ்வளவாகப் பிடிக்காது என்றாலும் அவன் திறமை மேல் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். இப்படி சட்டென்று அவன் கதை முடியும் என்று அவர் நினைக்கவேயில்லை. அவரது மனது லேசாக ஆட்டம் கண்டது. இருந்தும், அதே சாந்த சொரூபமான முகத்தோடு மன்னரிடம் பேசத் துவங்கினார்.

"அரசே!" என்றார் மெல்லிய குரலில்.

கனவிலிருந்து விழித்தவரைப்போல் ராஜ குருவை நோக்கினார் மன்னர்.

நடுக்கமான குரலில், "என்ன சொல்வதென்றே தெரியவில்லை ராஜ குருவே! மந்திரி தேவராஜனுக்கு நான் என்ன பதில் கூறப் போகிறேன். நம் மேல் இருக்கும் நம்பிக்கையில் தானே சம்யுக்தனை நாகவனத்திற்கு அனுப்பச் சம்மதித்தார்" என்றார் கலங்கிய கண்களோடு.

தந்தையின் கவலையை விட தன் நண்பன் பிரிந்து போன கவலை தான் ரவிவர்மனின் உள்ளத்தை வாட்டியது. தூணின் மேல் லேசாக உடலைச் சாய்த்தபடி வருந்திக்கொண்டிருந்தான்.

உள்ளுக்குள் சம்யுக்தன் இறந்ததை எண்ணிக் குதூகலித்த போதும், முகத்தில் துன்பரேகையைப் படரவிட்டுப் பொய்யாக நடித்துக்கொண்டிருந்தார், மணியம்மை.

"என் கணவரையும் மகனையும் காப்பாற்றி என்னிடம் ஒப்படைக்கிறேன் என்று வாக்குறுதி கொடுத்த மகனை, காலன் அழைத்துக்கொண்டானே!" என்று கண்ணீர் விட்டு அழுதார்.

ராஜ குரு, மணியம்மையை முதல் முறை பார்ப்பது போன்று வித்தியாசமாகப் பார்த்தார். பின் மன்னரை நோக்கித் தன் தலையைத் திருப்பிக்கொண்டார்.

"அரசே ! இப்போதைக்கு இவ்விஷயத்தை யாருக்கும் தெரியாமல் மறைப்பது நன்று"

"என்ன சொல்கிறீர்கள் ராஜ குருவே ! செய்த பாவத்திற்கே பரிகாரம் இல்லையே என்று வருந்திக்கொண்டிருக்கும் நிலையில், நீங்கள் இன்னும் பாவச்செயல்களைச் செய்யுமாறு என்னை

வற்புறுத்துகிறீர்களே?" என்று மனதின் வலியோடு வார்த்தைகளை உதிர்த்தார் மன்னர்.

"அரசே! நான் சொல்வதைத் தயவு கூர்ந்து கேளுங்கள். மந்திரி தேவராஜனுக்குத் தன் மகன் இறந்து போனது தெரிந்தால் எளிதில் தாங்கிக்கொள்ளமாட்டார். சிறிது காலம் சென்றதும் நிலைமையை எடுத்துக்கூறி புரியவைப்போம்"

மன்னரும் யோசனையோடு ஒப்புதலாய்த் தலையசைத்தார்.

"ஒன்று மட்டும் புரியவில்லை ராஜ குருவே! மார்த்தாண்டன் சம்யுக்தனை எப்படி எளிதில் கண்டுகொண்டான்?"

"இன்னும் நாகவன ஒற்றர்கள் இங்கு இருக்கிறார்கள் என்று அர்த்தம்" என்றார் ராஜ குரு சலனமற்ற முகத்தோடு.

மன்னர் அதிர்ச்சியோடு ராஜ குருவை நோக்கினார்.

"அதுவும் இந்த அரண்மனையிலேயே தான் உள்ளார்கள்" என்று கூறியபடி, அன்று சம்யுக்தனை அனுப்பிய நிகழ்வுகளை எண்ணிப் பார்த்தார்.

சம்யுக்தன் ஒற்றனாகச் செல்லப்போவதை மன்னரும் ராஜ குருவும் தனி அறையில் முடிவெடுத்த சமயத்தில், யார் யார் இருந்தனர்? என்று எண்ணிப்பார்த்தார். தங்களோடு ரவிவர்மனும் மணியம்மையும் தான் இருந்தனர். இவர்களைத் தாண்டி ரகசியங்கள் வெளியே செல்கிறது என்றால்...! என்று எண்ணியபடியே மணியம்மையை நோக்கினார் ராஜ குரு.

மணியம்மை, ராஜ குரு தன்னைக் கூரிய விழிகளால் துளைத்தபடி பார்ப்பதை அசௌகரியமாக உணர்ந்தார். பின்பு, என்ன எண்ணினாரோ தெரியவில்லை. மணியம்மை பொய்யான, கலங்கிய கண்களோடு அந்த அறையை விட்டு அகன்றார்.

சிறிது நேரத்தில் ரவிவர்மனும் சென்றுவிட்டான். மன்னரும் ராஜ குருவும் அமைதியின் மடியில் அமர்ந்துகொண்டிருந்தனர். ஒருவருக்கொருவர் பேசவில்லை. மௌனம் நீண்டுகொண்டே போனது.

அப்போது, பணியாள் ஒருவன் அவர்களின் முன் தோன்றி, மன்னரையும் ராஜ குருவையும் சிரம் தாழ்த்தி வணங்கினான்.

"சக்கரவர்த்தியே ! தங்களைக் காண மந்திரி தேவராஜன் வந்திருக்கிறார்"

மன்னரும் ராஜ குருவும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். 'வரச் சொல்லுங்கள்; தான் பார்த்துக்கொள்வதாய்' ராஜ குரு பார்வையால் மன்னருக்கு சமிக்ஞை கொடுத்தார்.

மன்னரும் ராஜ குருவின் பார்வையின் கூற்றை உணர்ந்துகொண்டு, "அவரை வரச் சொல் !" என்று பணியாளனுக்குக் கட்டளை பிறப்பித்தார். அவனும் அங்கிருந்து சென்றான்.

"சோதனை நம்மை விடாது போலிருக்கிறதே!" என்று வெறுப்போடு தனக்குத் தானே கூறிக்கொண்டார் மன்னர்.

ராஜ குரு, தேவராஜனை எப்படிச் சமாளிப்பது என்று யோசனையில் ஆழ்ந்தார். சில மணித்துளிகளில் தேவராஜனும் அங்கு வந்து சேர்ந்தார்.

"மன்னருக்கும் ராஜ குருவுக்கும் என் பணிவான வணக்கங்கள் !"

"வாருங்கள் மந்திரியாரே ! அமருங்கள் ! " என்று ஓர் ஆசனத்தைச் சுட்டிக்காட்டினார் ராஜ குரு.

*நான் அழுது காதலை*
*பெற்றேன் நீ*
*அழுது காதலை*
*தொலைக்கிறாய் ...!!!*

***உன் அழகை கிளியுடன்***
***ஒப்பிட்டேன் அப்போ***
***கிழிந்து போனது காதல் ...!!!***

*கே இனியவன்*

அதில் அமர்ந்தவாறே, "சம்யுக்தனிடமிருந்து ஏதாவது செய்தி வந்திருக்கிறதா?" என்று ஆசையோடு எதிர்பார்ப்பையும் கலந்து கேட்டார் தேவராஜன்.

மன்னருக்குச் சங்கடமாகப் போனது. ராஜ குருவை வெறுமையோடு பார்த்தார்.

"வந்திருக்கிறது மந்திரியாரே ! நாங்களே உங்களை அழைக்கலாம் என்றிருந்தோம். அதற்குள் நீங்களாகவே வந்துவிட்டீர்கள்" என்று லாவகமாகப் பேசினார் ராஜ குரு.

"என்ன செய்தி என்று நான் அறிந்துகொள்ளலாமா?" என்று கேட்டார் தேவராஜன் மகிழ்ச்சியாக.

"அது ரகசியம் மந்திரியாரே ! ஆனாலும், உங்களுக்கு வேண்டிய விஷயத்தைக் கூறுகிறேன். உங்கள் மகன் அங்கே நலமாக உள்ளதாகவும் கொடுத்த வேலைகளை முடிக்க முன்னேறிக்கொண்டிருப்பதாகவும் அவன் மேல் யாரும் சந்தேகம்கொள்ளவில்லை எனவும் குறிப்பிட்டிருந்தான்" என்று கூறினார் ராஜ குரு.

தேவராஜனுக்கு அகமும் முகமும் களிப்பில் நிறைந்தது. 'தன் மகன் சிறந்தவன்' என்று தனக்குள்ளாகவே கூறிக்கொண்டார்.

அடுத்த கேள்வியை தேவராஜன் கேட்பதற்கு முன், "மந்திரியாரே ! நானும் மன்னரும் ரகசியமாகச் சில விஷயங்களைப் பேச வேண்டிய நிலையில் உள்ளோம்" என்று புன்முறுவலோடு அவரை வெளியே செல்லும்படி சொல்லாமல் சொன்னார் ராஜ குரு.

"சரி, ராஜ குருவே ! நான் வருகிறேன்"

மன்னருக்குப் பிரிவு வணக்கத்தைக் கொடுத்துவிட்டு புளகாங்கித மனதோடு அங்கிருந்து புறப்பட்டார் தேவராஜன். தன் மகன் நலமாக உள்ளான் என்ற மகிழ்ச்சி எத்தனை நாள் நீடிக்கப்போகிறதோ தெரியவில்லை என்று காலம் அவரைப் பார்த்துச் சிரித்தது.

தேவராஜன் சென்றதும் மன்னர் பெருமூச்சை விட்டெறிந்தபடி, "சம்யுக்தனைப் பற்றிய உண்மை மந்திரிக்குத் தெரியாமல் எத்தனை நாள் மறைந்திருக்கும் என்று தெரியவில்லையே?" என்றார்.

"அவருக்குத் தெரியும் வரை" என்று புன்முறுவலோடு ராஜ குரு கூறினார்.

"இருந்த ஒற்றனும் வழக்கம் போல் மரணித்துவிட்டான். இனி, மார்த்தாண்டனின் நடவடிக்கையை யார் கூறப்போகிறார்கள்?" என்று மெல்லிய குரலில் சோகத்தைக் கலந்து கூறினார் மன்னர்.

"மார்த்தாண்டன் வெற்றி அடைந்துவிட்டான். ஆனால், முழுவதுமாக இல்லை. நம் ஒற்றன் ஒருவன் அங்கிருக்கிறான்"

மன்னர் ராஜ குருவைக் குழப்பத்தோடு நோக்கினார். ராஜ குரு ஏதோ கூற விழைந்து சட்டென்று நிறுத்தி அறையின் வாசலை நோக்கினார். பின், மன்னரின் காதருகில் சென்று, "பார்த்திபன் இன்னும் அங்கு தான் இருக்கிறான்" என்று கூறினார். மன்னரும் உண்மையை உணர்ந்தது போன்று பாவனை செய்தார்.

பிறகு, ராஜ குரு மன்னரிடம் விடைபெற்று அங்கிருந்து வெளியேறினார். வெளியேறும் சமயம் தூணின் பின்னால் மறைந்திருந்த மணியம்மையைக் காணவும் அவர் தவறவில்லை. வஞ்சகப்

புன்னகையோடு சென்றார் ராஜ குரு.

★ ★ ★

சம்யுக்தன் இல்லாத பார்த்திபனின் நிலைமை, ஒளி இல்லாத தீபம் போன்று தான். சம்யுக்தன் இறந்துவிட்டானா? அல்லது உயிரோடு இருக்கிறானா? என்று புரியாமல் இருதலைக்கொள்ளி எறும்பாகத் தவித்துக்கொண்டிருந்தான் பார்த்திபன்.

பார்த்திபன், சம்யுக்தன் தனக்கு இட்ட கட்டளையையும் தானும் விஜயனும் அதன் படி செயல்பட்டதையும் நினைத்துப் பார்த்தான்.

சம்யுக்தன் சொன்னபடியே விஜயனின் நண்பன் உடலை நதியின் ஓரம் கிடத்திவிட்டு, விஜயனும் பார்த்திபனும் மலைச்சரிவின், பாறைகள் நிறைந்திருந்த பகுதியில் யாருக்கும் புலப்படாவண்ணம் மறைந்திருந்து, திட்டம் சரியாக நடக்கின்றதா என்று பார்த்துக்கொண்டிருந்தனர். சிறிது நேரத்தில் சம்யுக்தனும் அருவியில் குதித்தான். திட்டம் சரியாக நடப்பதை எண்ணி முதலில் இருவருக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால், தண்ணீரில் விழுந்த சம்யுக்தன் திட்டமிட்டபடி இருவரையும் நோக்கி வரவில்லை. அப்பொழுது தான் இருவருக்கும் பதற்றமானது. தவறு நேர்ந்துவிட்டிருக்குமோ என்று அச்சப்பட்டனர். அந்நேரத்தில், நாகவன வீரர்கள் மலையில் இருந்து இறங்கி, கீழே கிடக்கும் உடலை நோக்கி வந்தனர். அதையும் சம்யுக்தன் முன்னமே யூகித்துக் கூறியிருந்ததால், அங்கிருந்த பாறைகளை உருட்டி, உடலின் மீது தள்ளிவிட்டனர். வீரர்களும் உடலை எடுத்துச் செல்ல முடியாத நிலையில் வெறுங்கையோடு திரும்பி விட்டனர்.

அவர்கள் சென்றதும், விஜயனும் பார்த்திபனும் சம்யுக்தன் விழுந்த இடத்திற்குச் சென்று பார்த்தனர். சம்யுக்தன் குதித்த இடத்திலிருந்த ஒரு பாறையின் மீது ரத்தம் படிந்து தண்ணீரோடு கலந்து வழிந்துகொண்டிருந்தது. ஆனால், சம்யுக்தன் அங்கில்லை. அந்த அருவியின் கொடிய வாயில் விழுந்தவர்கள் மீண்டு வந்ததாய் சரித்திரம் குறிப்பிடவில்லை. ஆனாலும், சம்யுக்தன் வந்துவிடமாட்டானா என்ற நம்பிக்கை ஒளியை மனதில் ஏற்றியபடி இருட்டும் வரை அங்கேயே இருவரும் காத்திருந்தனர். ஆனால், அவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. மனபாரத்துடன் விருப்பமில்லாமல் அவ்விடத்தை விட்டு அரைமனதோடு அகன்றனர்.

நாகவனத்தில் மக்கள் பேசிக்கொண்டதை வைத்துத்தான் சம்யுக்தன் எப்படி மார்த்தாண்டனால் தாக்கப்பட்டுள்ளான் என்பதைத் தெரிந்துகொண்டனர். மார்த்தாண்டன் ஒருவன் மீது குறி வைத்து வேலை எறிந்தால் அது பிரம்மாஸ்திரம் போல் உயிரைக் குடிக்காமல் விடாது என்று மக்கள் கூறினார்கள்.

ஆனாலும், 'தன் நண்பன் பல சாதனைகளைச் சாதிக்கப் பிறந்தவன். அதற்குள் அவன் உயிரை எடுக்கக் காலனுக்கு மனம் வராது' என்று சம்யுக்தன் மேல் இன்னும் நம்பிக்கை இழக்காமல் இருந்தான் பார்த்திபன். 'சம்யுக்தன், நிச்சயமாக மீண்டு வருவான்; என்னோடு சேருவான்; அவனைக் கட்டித் தழுவிக் கண்ணீர் மல்க அவன் மேல் சின்னக் கோபம் கொள்வேன்' என்று கற்பனை உலகில் சஞ்சரித்தவாறு குடிசையின் அருகிலிருந்த மரத்தடியில் வேதனையோடு அமர்ந்திருந்தான் பார்த்திபன்.

பார்த்திபனின் குறும்புத்தனம் மறைந்து விட்டிருந்தது. சோர்வு அவன் மனமெங்கும் பரவி அவனது முகத்தை வாட்டமுறச் செய்தது. இறுகிய முகத்தோடு வேலை செய்துகொண்டிருந்தான். இத்துணைப் பிரச்சனைகள் நடந்தும் அவன் சிறிதும் கலங்கவில்லை. எல்லாவற்றையும் உள்ளூறவே வைத்துக்கொண்டு நடைப்பிணம் போல் வாழத் துவங்கினான். 'சம்யுக்தன் வருவான்; நிச்சயம் வருவான்' என்ற எண்ணம் மட்டும் அவன் மனதில் தேயாமால் வளர்பிறை போல வளர்ந்துகொண்டே போனது.

நாட்களும் கடந்துகொண்டே போயின. சம்யுக்தன் வந்தபாடில்லை.

விஜயனுக்கும் சம்யுக்தனின் நினைவு மனதில் உறுத்திக்கொண்டே இருந்தது. 'சம்யுக்தன், தன்னைக் காப்பாற்றியது; தன்னிடம் உதவி கேட்டது' எல்லாம் எண்ணுகையில் அவனையறியாமல் கண்ணீர்ப் பூக்கள் பூத்தன. விஜயனுக்கு ஒரே ஒரு ஆறுதல் வள்ளி மட்டுமே. அவளிடம் நடந்ததைப் பிசகில்லாமல் கூறிவிட்டான்.

வள்ளியால் தாங்கிக்கொள்ளவே முடியவில்லை. தன் ஆதங்கத்தை இரவு முழுதும் அழுது தீர்த்துக்கொண்டாள். சம்யுக்தன் ஒரு அண்ணனாகத் தன்னிடம் பரிவு காட்டியதை எண்ணும் பொழுது விம்மலும் அழுகையும் ஒரு சேர அவளை ஆட்கொண்டது.

அரண்மனையில் வேலை முடிந்ததும் தன் குடிசையின் அருகில் இருக்கும் ஆலமரத்தடியில் அமர்ந்து பழைய நினைவலைகளில் நீந்திக்கொண்டிருப்பான் பார்த்திபன். உணவு உண்ண மறந்து வெகுநாட்கள் ஆனதால், அவனது உடல் இளைத்து மெலியத் துவங்கியது.

இரவு நேரத்தில் வள்ளி அவனுக்காக உணவு கொண்டு வருவாள். அதை உண்ணாமல் வெறித்தபடியே கிடப்பான். 'சம்யுக்தன் உண்டிருப்பானா?' என்று தனக்குள்ளாகவே கேட்டுக்கொள்வான். பக்கத்துக் குடிசைகளிலிருந்து வரும் சமையல் வாசனையை நுகரும் போதெல்லாம், சம்யுக்தன், 'எதற்காக நீ உண்டுகொண்டே இருக்கிறாய்?' என்று கடிந்துகொள்வது அவன் நினைவுக்குவரும்.

பார்த்திபன், உறங்காமல் வேலைக்குச் செல்லத் துவங்கியதால் உடல் தளரத் துவங்கியது. சமையலறையில் வேலை பார்த்துக்கொண்டிருந்த பார்த்திபன் தோட்டத்திற்குச் சென்று வேலையைப் பார்க்கத் துவங்கினான். செடிகளுக்கும் மரங்களுக்கும் தண்ணீர் ஊற்றுவது அவனுக்குச் சிறு நிம்மதியை வழங்கியது.

சுந்தரியும், அவனை அவ்வப்போது கவனிக்கத்

தவறவில்லை. அவன் மேல் லேசான பரிதாபம் உண்டானது அவளுக்கு. அதனால், அவனைக் கடிந்துகொள்ளவில்லை.

**அவள்**

*புத்தம் புதிய*

*கரன்சி நோட்டு!*

*பக்கத்தில்*

*கசங்கியபடி அவள்!!!*

*- காரைசீனு -*

விஜயன், சம்யுக்தனின் குதிரையைப் பராமரிக்கத் துவங்கினான். சம்யுக்தனுக்கு மட்டுமே பணிந்து நடந்த குதிரை முரண்டு பிடித்தது. ஆயினும், விஜயன் காட்டிய பரிவால் அவனுக்கு அடங்கியது. சம்யுக்தன் எப்பொழுது வருவான்? என்று ஏக்கத்தோடு தினமும் காத்துக்கொண்டிருந்தது அக்குதிரை.

ஒரு இரவு வேளையில், சம்யுக்தன் வளர்த்த யானை பிளிரும் சத்தம் அரண்மனையையே நடுங்கச் செய்தது. நாகவன வீரர்கள் சம்யுக்தனைத் தாக்கிய நிகழ்வை மட்டும் அது இன்னும் மறக்காமல் நினைவில் வைத்துக்கொண்டிருந்தது. தன் கோபத்தை அவ்வப்போது வெளிக்காட்டி, தன்னை நெருங்குபவர்களைத் தாக்கத் தொடங்கியது. அதனால், அதைச் சங்கிலியால் பிணைத்து வைத்திருந்தனர்.

அன்றிரவு, அந்த யானையைப் பார்க்கப் பார்த்திபன் சென்றான். யானை பிளிறியபடியே அவனைப் பார்த்தது. சம்யுக்தனுடன் பார்த்திபனைக் கண்டுள்ளதால், அவனையே சிறிது நேரம் உற்றுநோக்கியது. பார்த்திபன் யானையை நெருங்கினான். யானை ஒன்றும் செய்யாமல் அவனைப் பார்த்தபடியே இருந்தது. திடீரென்று, அவனைத் தாக்க இரண்டு அடி முன்னே வந்தது. பார்த்திபன் தடுமாறிக் கீழே விழுந்தான். அவன் விழுந்த இடத்திற்கு முன்னேற முடியாமல், யானையின் கால்களில் கட்டப்பட்டச் சங்கிலி அதைத் தடுத்து நிறுத்தியது. அதனால், பார்த்திபன் தப்பித்தான். அவனைப் பார்த்தபடி துதிக்கையை உயரத் தூக்கிக் கோரமாகப் பிளிறியது யானை.

அந்நேரத்தில், சுந்தரி குதிரையில் வேகமாகச் சென்று அரண்மனை வாசலில் மறைந்தாள்.

'இந்நேரத்தில் எங்கே செல்கிறாள்?' என்று எண்ணிய பார்த்திபன், எழுந்து, சிந்தித்தபடியே தன் குடிசையை நோக்கிச் சென்றான்.

★ ★ ★

ரவிவர்மனின் நிலைமையோ இன்னும் திண்டாட்டமானது.

சம்யுக்தனின் மரணத்தைப் பற்றி சகுந்தலை அறிந்துகொண்டால், தன்னைப் பற்றி என்ன நினைப்பாள்? 'என் அண்ணனை நீங்கள் தான் கொன்றுவிட்டீர்கள்' என்று கதறப்போகும் அவள் பாசத்திற்கு, நான் கூறப்போகும் ஆறுதல், அவள் மனதைச் சாந்தப்படுத்துமா ? சம்யுக்தன் படிக்கச் சென்றிருக்கிறான் என்று நான் கூறியதை நம்பி சந்தோசமாக இருக்கிறாளே? அந்த சந்தோசத்தைத் திரும்ப அவள் முகத்தில் காண முடியுமா? அவளை ஏமாற்றிப் பாவியாகிப் போனேனே! என்று எண்ணியபோது இதயத்தில் முள் தைப்பதாய்த் தோன்றியது ரவிவர்மனுக்கு.

அதனாலேயே சகுந்தலையைக் காண அவன் விரும்பவில்லை. அவளே வந்தாலும் முகம் கொடுத்துப் பேச அவன் மனதிற்குத் துணிவில்லை. அவளது புன்னகை அவனது உடலைத் தீயாய் சுட்டெரித்தது. ரவிவர்மனின் இந்த நிலைமை சகுந்தலைக்கு மனவேதனையையும் குழப்பத்தையும் உண்டு பண்ணியது. இரவில் அழுதபடி தலையணையை நனைக்கத் துவங்கினாள் அந்தப் பேதை.

தன் நண்பன் சம்யுக்தனின் இறப்பிற்குக் காரணமானவர்களைப் பழி வாங்க, அனலாய்க் கொதித்தது ரவிவர்மனின் உள்ளம். அதனால், ஒரு முடிவுக்கு வந்தவனாய் ஓர் ஓலையை எழுதிப் படுக்கையில் வைத்துவிட்டு, சில உடைமைகளை மட்டும் எடுத்துக்கொண்டு குதிரையில் ஏறி இருட்டில் கரைந்து போனான்.

சுமார் ஒன்பது நாழிகைகள் கழித்து, ரவிவர்மன் உறங்கிவிட்டானா என்று பார்க்க வந்த மன்னருக்கு ஓலையைப் பார்த்து அதிர்ச்சி ! ஓலையில் இருக்கும் செய்தியைக் கலவர முகத்தோடு படிக்கத் துவங்கினார்.

தந்தையே ! என் நண்பன் சம்யுக்தன் இறந்து போனதை எண்ணி என் மனம் எல்லையில்லா துயரில் ஆழ்ந்திருக்கிறது. அவனை வஞ்சம் வைத்துப் பழி தீர்த்த கயவர்களைப் பழி வாங்காமல் விடமாட்டேன். நானே ஓர் ஒற்றனாக நாகவனத்திற்குப் புறப்படுகிறேன். என்னை என் வழியில் போக விடுங்கள் ! பாச விலங்கால் என்னைப் பிணைத்து வைத்திருந்தது போதும். இனி, வெற்றி அல்லது வீரமரணம் என்கின்ற தாரக மந்திரத்தை ஒட்டியே என் வாழ்வு செல்லப் போகிறது. என்னை மன்னியுங்கள் ! என்று எழுதி இருந்தான் ரவிவர்மன்.

மன்னர் கலங்கிய கண்களோடு அவ்வோலையையே பார்த்துக்கொண்டிருந்தார்....

இளவரசன் ரவிவர்மன், குதிரையை விரட்டிக்கொண்டு நாகவனத்தை நோக்கித் தன் பயணத்தைத் தொடங்கினான்...

தொடரும்...

# மாவீரர்க்கு அஞ்சலிகள்

பூங்கோதை



தம்மை மெழுகாக்கி தரணியெங்கும் தமிழன்
தலை நிமிர வைத்த நம் மாவீரச் செல்வங்களை..
முன்னை நம் தேசத்தின் முடிசூடா மன்னவரை
முன்னிறுத்தித் தலை சாய்த்தேன்..
வந்தனங்கள் தந்தேன் எம் வீரக் குழந்தைகளே

மார்பை நிமிர்த்தி நின்று
மறப் போர் தொடுத்து நின்ற
மான மா வீரர் முன்னே
முகம் கொடுக்க முடியா முட்டாள்கள்..
நாடுநாடாய் அலைந்து தம்
அரைகச்சை தனை ஏந்தி
அரசியல் பிச்சை வாங்கிவந்தார்
அப்போதும் கூட... வேங்கைகளைச் சிம்ம
சொப்பனமாய்க் கண்டவர்கள்..
அப்பாவி மக்கள் மேல் தம்
சுடுகலன் நீட்டி நின்றார்..

குஞ்சுகளும் குமரிகளும்
பெற்றவரும் பெரியவரும்
குடல் பிதுங்கி, தலை சிதைத்து
குப்பையாய் சிதறடித்த கிராதகர்கள்...
மாணவனை மருத்துவனைப்
பேதமின்றிக் கொன்ற பேர் அரக்கர்...
குருதிச் சேற்றிடையே குற்றுயிராய்
குளித்து நின்ற போது நாம்
கண்டு கொண்டதொன்றே தான்

சாதியும் சமயமும் அங்கு மறைந்தன..
சமத்துவம் பேசின சதை பிண்டங்கள்... தமிழ்
சந்ததி உதிரத்தில் மிதந்தது கண்டோம்
இசைப்பிரியா முதல் இன்னும் பெயர் தெரியா
இளங்குருத்துக்களின் அலறல் ஒலிகள்
ஒதுங்கி நின்ற உலகத்தின் இதயத்தை
ஓங்கி அறைந்து.. நீதி கோரி நிற்கின்றன

ஆறடி மண்கூட வேண்டாம் எமக்கென்று
அடங்காத காட்டாறாய் பாய்ந்தவர்க்கு
அனுமதி இல்லையாம் கல்லறையில் தூங்க..
ஈனப் பிறவிகளே
ஈழத்தமிழச்சி என் அறைகூவல் கேள்..

எம் வீரர்களை அழிப்பதெனின்
அவர்கள் தூங்கிய கல்லறைகளை அல்ல
எம் இதயங்களை இடித்துப் போடு
இங்கே இரத்தமும் சதையும் மட்டுமல்ல
அவர் உருவாக்கிக் கொடுத்த
உணர்வோடு மானமும் உறுதியும்
உண்டென்று உணர்ந்து கொள்...

வரைதாங்கும் வன்டோளன்
வழிகாட்டி விளைவித்த வீரமண்!!!
புறம் பாடிக் கொடியேந்திப் புயலாகிப்
பொருதிய வீரர்கள் வாழ்ந்த மண்!!!
இறவாத தன்மானம் இயல்பிலே கொண்டு
ஈகங்கள் செய்தவர் வாழ்ந்த மண்!!!
விழியிலே நெருப்பேந்தி விருப்போடு
விடியலை நோக்கி நடந்த மண்!!!
அழியாத வரலாற்றைத் தனதாக
அகத்திலே வரைந்த நம் சொந்த மண்!!!

தேசியக் கொடி முன் தலைநிமிர்ந்து
தீரமாய் வணக்கம் செய்தோர் இன்று
தேசம் இழந்து அலைவதோ...
வீர மறவரைப் போர்த்திய நம் கொடி
வெற்றுத் துணியாய் வீழ விடுவதோ

வித்தாகி போன நம் முத்துக்கள் மீது
சத்தியம் உரைத்துப் பாடுகிறேன்
மானத் தமிழன் வாழ்வில் ஒருபோதும்
மயங்கிக் கிடந்ததாய் சரித்திரம் இல்லை
மீண்டும் ஓர் நாள் ஆர்த்தெழுவான்
மூண்ட பகை பொருதப் பொங்கியெழுவான்
தீ பரவத் திசைகள் ஓர் நாள் எரியும்
தீரப்படைகள் அணிவகுத்தேகும்..

அன்று
வீரக் குழந்தைகளே... எம் தியாக செம்மல்களே- நீர்
விழிகளில் சுமந்த கனவுகள் மெய்ப்பட
வீரத் தமிழ் மண் மீண்டும் ஒரு நாள்
விடியலின் கீதம் பாடும்..

# என் ஊரை காணவில்லை!

கே இனியவன்



நான்கு திசையும் வயல்கள்
நாலாபுறமும் குளங்கள்
ஊர் மத்தியில் அம்மன்
ஆலயம் எல்லை புறத்தில்
வீர பத்திரர்
பைரவர்
அய்யனார் ஊரை காக்கும்
கடவுள்களாய்...!!!

• • •

சிறு படகுடன் நிறைந்த
கடற்கரை தொலைதூரத்தில்
உடைந்த கட்டுமரங்களும்
ஆங்காங்கே சிதறிகிடக்கும்
வரையறுக்கப்பட்ட குடிசைகள்
கிராமிய பண்பாட்டை
மாற்றாத வாழ்க்கை முறை...!!!

• • •

மாலை நேரத்தில் ஆலமரத்தடி
அறிவு தாத்தாக்களின் மன்றம்
மழைக்கு கூட பாடசாலை
பக்கம் ஒதுங்காதவர்கள்
புராணக்கதையிலும்
உலக நடப்பிலும்
படிக்காத மேதைகள்.....!!!

• • •

பச்சை மரமொன்றில்
பழங்கள் எதுமில்லை
கறுப்பாய் ஒரு கனி
அதன் பெயர் தேன் கூடு
அதற்கு ஒரு கல்லால் எறிந்து
தேனிகலைக்கும்போது
தலை தெரிக்க ஓடும் சிறார்கள்...!!!

• • •

இத்தனையும் அனுபவித்து சுவைத்த
அற்புத மனிதன் நான்
காலம் கடந்து என் பிள்ளையுடன்
என் ஊருக்கு போனேன் கனவுகளுடன்
அம்மன் கோயில் இராஜ கோபுரத்தை
காணவில்லை சிறு கூடாரத்துக்குள்
முடங்கி இருந்தாள் என் தாய்
காவல் தெய்வங்கள் இருந்த
கால சுவடியை கூட காணவில்லை .....!!!

• • •

என் கனவு மட்டும்
தவுடு பொடியாகவில்லை
என் ஊரும் தவுடு பொடியாகிவிட்டது
ஆலமரம் கூட அங்கவீனமாய்
கிளைகள் உடைந்த நிலையில்
வீடுகள் எல்லாம் துப்பாக்கி
துளையால் அரிதட்டானது
ஓடி விளையாடிய வயலுக்குள்
இறங்க விரும்பினேன் அருகில்
ஒரு பலகை .கவனம்
வெடிக்கும் இறங்காதீர் இறங்காதீர்...!!!

• • •

என் ஊரை காணவில்லை
என் உறவுகளை காணவில்லை
ஓடி விளையாடிய என் நண்பர்களை
ஓரிரு இடங்களில் புகைப்படத்தில் பார்த்தேன்
இது கவிதை இல்லை நான் நேரில்
கண்ட அனுபவித்த துன்பங்கள்
தூரத்தில் என் பழைய நண்பன்
ஓடி வந்து கட்டிப்பிடித்தான்
முடியவில்லை அவனால்
ஒரு கை இல்லை .....!!!

• • •

# மந்த்ரமும் மாந்த்ரீகமும்

கருணாகரன்

நாம் அறிந்து கொள்ள முற்படும் யோகம் மூலிகை மந்த்ரம் பகுதியில் மூலிகைகளை பயன்படுத்தும் விதம் பற்றிய பாகத்தை காணப் போகின்றோம்.



“ஒவ்வொரு மூலிகைக்கும் அதனை நாம் எடுத்துக்கொள்வதற்கு குறிப்பிட்ட நாளும் , நட்சத்திரமும், மந்திரமும் உண்டு .

மூலிகை சாபம் நீக்கவும் , எடுக்கவும் என்ன செய்ய வேண்டும் , எப்போது செய்ய வேண்டும் , எப்படி செய்ய வேண்டும் என்பதனை விரிவாக பார்ப்போம். “

ஸ்ரீ ஸ்ரீ மகா குருவான கருவூரார் மூலிகைகளையும் `அதற்குரிய மந்த்ரங்களையும் தெளிவாக குறிப்பிடுகின்றார்.

அவையாவன :

வசிய மூலிகையில் ஒன்றான சீதாதேவி செங்கழுநீர் எனும் மூலிகையை பறிக்கும் முன் *“ஓம் ஸ்ரீம் லட்சுமி தேவி “* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

வசிய மூலிகையில் ஒன்றான பொன்னூமத்தை எனும் மூலிகையை பறிக்கும் முன் *“கிறீணி வருணியாரே மதர்நாமி சீவி வசியம் பவ் வே “* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

வசிய மூலிகையில் ஒன்றான கரும் செம்பை எனும் மூலிகையை பறிக்கும் முன் அதற்கு தாமரை அல்லது கற்றாழை நூலில் காப்புக்கட்டி பூஜைகள் செய்து *“ஓம் ஓம் சியாமள ரூபி சாம்பவி கிறீங்கி விலிங் கிறிஞ்சாதகி “* என்ற மந்திரம் உருவேற்றி மூன்றாம் நாள் அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

வசிய மூலிகையில் ஒன்றான வெண் குன்றிமணிக் கொடி எனும் மூலிகையை பறிக்கும் முன் அமாவாசையன்று காப்புக்கட்டி பூஜை செய்து *“வம்மம் வசவிச நிறை மிருக வசீகரி ஓம் “* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

வசிய மூலிகையில் ஒன்றான மஞ்சள் கரிசலாங்கண்ணி எனும் மூலிகையை பறிக்கும் முன் ஒரு வெள்ளிக்கிழமையன்று காப்புக்கட்டி மறு வெள்ளிகிழமை *“ ஓம் கிலியுஞ் சவ்வு மஹி “* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

✡ ✡ ✡ ✡ ✡ ✡

மோகன மூலிகையில் ஒன்றான வெண் ஊமத்தை எனும் மூலிகையின் இலையை பறிக்கும் முன் “ மா இதான் மத்தம் தொன்மத்தி *ஓம் ஆம் இலீஞ் சத்திசன மோகினி* “ என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

மோகன மூலிகையில் ஒன்றான மருளுமத்தை எனும் மூலிகையை பறிக்கும் முன் *“ ஓம் தேவ மோகம் வருக வருக “* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

மோகன மூலிகையில் ஒன்றான ஆலம் விழுது எனும் மூலிகையை பறிக்கும் முன் “ ஓம் தேவ மோகம் வருக வருக “ என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்

✡ ✡ ✡ ✡ ✡ ✡

உச்சாடன மூலிகையில் ஒன்றான நரி மிரட்டி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடிக்கு வியாழனன்று காப்புக்கட்டி *“ சடாய் சடாய் தும்ம சடாய் சடாய் “*

என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

உச்சாடன மூலிகையில் ஒன்றான மான் செவி கள்ளி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடிக்கு மன மகிழ்வுடன் வாசனை மலர்கள் தூவி தூபமிட்டு , தீபம் காட்டி *" அருணகிரி ஆங்கார சத்தி சத்தி தாய் உச்சாடி "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

உச்சாடன மூலிகையில் ஒன்றான ஆரண முரி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடியின் வேருக்கு காப்புகட்டி , *" ஓம் கோர கோர ரூபி மாயி சடாய் சடாய் "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

✡ ✡ ✡ ✡ ✡ ✡

ஸ்தம்பனம் மூலிகையில் ஒன்றான கட்டுக் கொடி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடியின் வேருக்கு காப்புகட்டி , *" சீலிகிளால் பேத்துலால் பேத்து சிவசிவா"* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் . (ஜலஸ்தம்பனம்)

ஸ்தம்பனம் மூலிகையில் ஒன்றான பால்பிரண்டி (பாற் குரண்டி) எனும் மூலிகையை பறிக்கும் முன் , *" நீலகண்டி விசைய விசைய உயர்திற அத்திற் அகலந் தோபா "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் . (சுக்லஸ்தம்பனம்)

ஸ்தம்பனம் மூலிகையில் ஒன்றான நத்தை சூரி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடியின் வேருக்கு காப்புகட்டி , " ஓம் வச்சிர ரூபி சூரி சூரிம, காவீரி சுவாகா " என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் . (ஜெயஸ்தம்பனம்)

✡ ✡ ✡ ✡ ✡ ✡

ஆகர்ஷனம் மூலிகையில் ஒன்றான சிறு முன்னை எனும் மூலிகையை பறிக்கும் முன் செடியின் வேருக்கு காப்புகட்டி , " சர்வ ஆகமுஷ்ணி சுவாகா " என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும் .

ஆகர்ஷனம் மூலிகையில் ஒன்றான சிறியா நங்கை எனும் மூலிகையை பறிக்கும் முன் செடிக்கு கரி நாளில் காப்புகட்டி , *" சர்வ பிசாகர்ஷனி சர்வ மோகினி சூழ் கிருஷ்ணி வா வா "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

ஆகர்ஷனம் மூலிகையில் ஒன்றான அழுகண்ணி எனும் மூலிகையை பறிக்கும் முன் செடிக்கு திங்கள் கிழமை காப்புகட்டி , *" சர்வ சித்த மோகினி , சர்வா கிருஷ்ணி சாம்பஷ சுவாகா "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

✡ ✡ ✡ ✡ ✡ ✡

பேதனம் மூலிகையில் ஒன்றான கோழியவரை எனும் மூலிகையை பறிக்கும் முன் செடிக்கு திங்கள் கிழமை காப்புகட்டி சித்திரை நட்சத்திரத்தன்று *" அரி அர தேவி , பிரம தேவி சர்வ தேவியே தீர் "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

பேதனம் மூலிகையில் ஒன்றான செம்பசலை கீரை எனும் மூலிகையை திருவாதிரை அன்று காப்பு கட்டி, *" சீறியுங் கீறியுங் சீறியும் "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

பேதனம் மூலிகையில் ஒன்றான கீழாநெல்லி எனும் மூலிகையை புதன் கிழமை அன்று காப்பு கட்டி வியாழன் அன்று தேங்காய் உடைத்து அளமை பெறும் , *" பூமி வித்தேஷணி அஞ்சணி மூலி சகல சர்வ பழமை பல பதார்த்தத் தெரிய சுவாகா "* என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

✡ ✡ ✡ ✡ ✡ ✡

மாரணம் மூலிகையில் ஒன்றான கார்த்திகை கிழங்கு எனும் மூலிகையை கார்த்திகை நட்சத்திரத்தன்று மஞ்சள் நூல் காப்பு கட்டி ஆடு பலி கொடுத்து , " சரவணபவா நமா " என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

மாரணம் மூலிகையில் ஒன்றான காஞ் சொறி வேர் எனும் மூலிகையை பௌர்ணமிக்குப் பின் வரும் முதல் திதியில் காப்பு கட்டி மறுநாள் மத்தியானம் அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து நீரில் ஆட்டி சுத்தப்படுத்தி பயன்படுத்த வேண்டும். (மந்திரமில்லை)

மாரணம் மூலிகையில் ஒன்றான நச்சுப்புல் எனும் மூலிகையை மன மகிழ்வுடன் பூஜை செய்து காப்பு

கட்டி , “ விருகனீ விஷதரி “ என்று செடியின் முன் நின்று மந்த்ரம் ஜபித்து , அந்தச் செடியின் ஆணிவேரை அறுத்து விடாமல் எடுத்து பயன்படுத்த வேண்டும்.

சில காரணங்களுக்காக எல்லாவித மூலிகைகளுக்கும் மந்திரங்கள் சொல்லப் படவில்லை.

முழு விபரமும் அறியவும் , பயன்படுத்தும் முறை தெரியவும் தகுந்த குரு வேண்டும்.

பயிற்சியில் முழுமை கண்டால் குருவே உங்களை வந்தடைவார் .

ஸ்ரீ ஸ்ரீ மகா குரு அகஸ்திய பெருமானானவர் அஷ்ட கர்மாக்களுக்கும் உரிய கிழமைகளை சொல்லும் போது ...

வசியம் – ஞாயிறு , மோஹனம் – திங்கள் , பேதனம் – செவ்வாய் , ஸ்தம்பனம் - புதன் , உச்சாடனம் – வியாழன் , ஆக்ருஷ்ணம் – வெள்ளி , மாரணம் – சனி உகந்ததென்கிறார்.

ஸ்ரீ ஸ்ரீ மகா குரு அகஸ்திய பெருமானானவர் அஷ்ட கர்மாக்களுக்கும் உரிய திக்குகளை குறிப்பிடும் போது ...

வசியம் – கிழக்கு , மோகனம் – வடக்கு , பேதனம் - வடகிழக்கு , ஸ்தம்பனம் – தென்மேற்கு , உச்சாடனம் – வடமேற்கு , ஆக்ருஷ்னம் – மேற்கு , மாரணம் – தெற்கு என உபதேசிக்கின்றார்.

- மேலும் எல்லாவித கர்மங்களுக்கும் ஈசான்யம் சிறந்ததெனவும் அருள்பாலிக்கின்றார்.

தீபங்களையும் , மந்த்ரங்களையும் குறிப்பிடும்போது:

கிழமை : ஞாயிறு , வஸ்திரம் : சிவப்பு பட்டு , திசை : கிழக்கு நோக்கி வில்வ மரப் பலகையில் அமர்ந்து , திரி : தாமரை நூல் ,நெய் : காராம் பசு (கருத்த நிற முள்ள பசு ) நெய் : தீபம் ஏற்றி யநமசிவ என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய வசியம் சித்திக்கும் .

கிழமை : திங்கள் , வஸ்திரம் : மஞ்சள் பட்டு , திசை : வடக்கு நோக்கி மான் தோலில் அமர்ந்து , திரி : கன்னி நூல் , எண்ணை : நல்லெண்ணெய் : தீபம் ஏற்றி மசிவயந என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு சொல்லி முறைகள் ஜபம் செய்ய மோகனம் சித்திக்கும் .

கிழமை : செவ்வாய் , வஸ்திரம் : சாதாரண வெள்ளை , திசை : வடகிழக்கு நோக்கி பளிங்கு கல்லினால் ஆன ஆசனத்தில் அமர்ந்து , திரி : கந்தல் துணி , எண்ணை : புன்னை எண்ணை : தீபம் ஏற்றி யவசிநம என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய பேதனம் சித்திக்கும் .

கிழமை : புதன் , வஸ்திரம் : சாதாரண பட்டு , திசை : தென்மேற்கு நோக்கி ஆல மர பலகையில் அமர்ந்து , திரி : எவ்விதமான திரியும் , எண்ணை : ஆதளைக் கொட்டை எண்ணை : தீபம் ஏற்றி நமசிவய என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய ஸ்தம்பனம் சித்திக்கும் .

கிழமை : வியாழன் , வஸ்திரம் : பச்சை பட்டு , திசை : வடமேற்கு நோக்கி பலா மர பலகையில் அமர்ந்து , திரி : இலவம்பஞ்சு , எண்ணை : புங்க எண்ணை : தீபம் ஏற்றி வயநமசி என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய உச்சாடனம் சித்திக்கும் .

கிழமை : வெள்ளி , வஸ்திரம் : சாதாரண பட்டு , திசை : மேற்கு நோக்கி சண்பக மர பலகையில் அமர்ந்து , திரி : வெள்ளெருக்கு நார் , எண்ணை : ஏரண்டத்தெண்ணை : தீபம் ஏற்றி வசியநம என்ற மந்த்ரத்தை லட்சத்தி எட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய ஆக்ருஷ்ணம் சித்திக்கும் .

கிழமை : சனி , வஸ்திரம் : சாதாரண பட்டு , திசை : தெற்கு நோக்கி அத்தி மரத்தால் ஆன பலகையில் அமர்ந்து , திரி : வேலிப்பருத்தி , எண்ணை : வேப்ப எண்ணை : தீபம் ஏற்றி யசிவநம என்ற மந்த்ரத்தை லட்சத்திஎட்டு முறைகள் சொல்லி ஜபம் செய்ய மாரணம் சித்திக்கும்.

**சில சூட்சும வார்த்தை விளக்கங்கள் :**

கன்னி நூல் காப்பு கட்டி என்பது தாமரை மொட்டு உள்ள (பூ பூக்கும் முன் ) தண்டினை எடுத்து அதிலிருந்து எடுக்கும் (மகரந்த இழை) நூலினால் குறிப்பிட்ட மூலிகையில் மூன்று முறை சுற்றுவது .

மஞ்சள் நூலால் காப்பு கட்டி என்றால் விரலி மஞ்சளை முனை முறியாமல் எடுத்து அறைத்து , அதில் மேற்படி கன்னி நூலை புரட்டி எடுத்து பின்னர் உலர்த்தி வைத்துக் கொண்டு பயன்படுத்துவதாகும்.

*பொதுவான மூலிகை சாப விமோசன மந்திரம்:*

*"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம், ஐம் க்லீம் ஸௌம்,*
*ஸர்வ மூலி சாபம் நாசய நாசய,*
*சித்தர் சாபம் நாசய நாசய,*
*தேவ முனி , அசுர முனி சாபம் நாசய நாசய,*
*ஸர்வ ஸர்ப்ப சாபம் நாசய நாசய ஹூம்பட் ஸ்வாஹா "*

என்பதாகும்.

அன்பிற்குரிய நண்பர்களே ,

யோகமும், சித்தும், மந்த்ரமும் , மாந்த்ரீகமும் நம் நலனுக்காக இறைவனால் உருவாக்கப்பட்டதேயன்றி பிறருக்கு தொல்லை கொடுக்க அல்ல என்பதனை உணர்ந்து செயல்படுங்கள்.

*“இன்றைய விதைப்பு நாளைய அறுவடை என்பதை எப்போதும் , எந்த நிலையிலும் மறக்கவேண்டாம்” வளமோடு வாழுங்கள், வாழும் நாளெல்லாம்.*

# உறவைத் தேடும் உயிர்

*சிவாஜிதாசன்*

தேடல் 12

மெமோரியல் உலகின் அதிசயங்களும் அங்கு நிலவும் மாயாஜால நிகழ்வுகளும் வசந்தனின் உள்ளத்தில் பயத்தையும் கிளர்ச்சியையும் ஒரு சேர உண்டு பண்ணின. எத்துணை பிரம்மாண்டம் ! என்று வாய் பிளந்த அவன், சில அழுகைக் குரல்களையும் சிரிப்புக் குரல்களையும் கேட்டு லேசாக நடுங்கிப்போனான். அவை எங்கே இருந்து வருகின்றன? என்று அங்கும் இங்கும் ஓடியபடி ஆராய்ந்தான். அவனுக்குப் பிடிபடவில்லை. ஒவ்வொரு நொடியும் வித்தியாசமாகவும் விசித்திரமாகவும் இவ்வுலகம் கடந்து போகிறதே ! என்று எண்ணியபடி, மலரின் மீது நடப்பதைப் போன்று மெதுவே நடக்கத் துவங்கினான்.

தண்ணீர்க் கதவுகளின் ஒலி இன்னிசையாகக் காதினுள் நுழைய, அவனது எண்ணங்கள் மத்தளங்களாக ஒலித்து சுதி சேர்த்துப் பேரழகை கண்களால் கவர்ந்துகொண்டிருந்தது. லேசான அழுகுரல் மீண்டும் அவன் செவியில் நுழைய, எங்கே என்று மீண்டும் அவன் திரும்ப, ஓஓ... வென்று கத்தியபடி விழும் ஜலக் கதவுகளின் பின்னே அழுகுரல் கேட்கிறது என்று தெரிந்துகொண்டான்.

என்னவென்று தெரிந்துகொள்ளலாம் என்ற ஆவலோடு அந்த ஜலக் கதவினை நெருங்கினான் வசந்தன். அதை நெருங்க நெருங்க ஏதோ ஒரு சக்தி அவனை நெருங்க விடாமல் தடுத்தது. அவனது உடலைக் கயிறால் சுற்றி இறுக்கியதாய் அவனுக்குத் தோன்றியது. அருவியின் துளி அமிலத் துளியாய் அவன் முகத்தில் விழுந்து சுட்டெரித்தது.

அங்கிருந்து தப்பிவிடலாம் என்று எண்ணிய அவனை, ஒரு குரல் தடுத்து, "உள்ளே வா !" என்று அழைத்தது. ஷோபனாவின் குரல் தான் அது. அவள் உள்ளே என்ன செய்கிறாள்? என்று எண்ணிய அவன், சில அடிகள் பின்னே வைத்து ஒரு நீண்ட பெருமூச்சினை விட்டெறிந்தபடி உள்ளே எப்படிச் செல்வதென்று சிந்தித்தான்.

யார் தடுக்கிறார்கள்? என்று ஜலத் திரையை உற்று நோக்கினான். ஒரு நொடி ஸ்தம்பித்து, அதிர்ச்சி அலைகளில் மூழ்கினான். திரையின் நடுவே தண்ணீர் தேவதை போன்று ஓர் உருவம் அசைந்தாடுவது அவனுக்குப் புலப்பட்டது. அவள் தண்ணீராலேயே தீட்டப்பட்ட ஓவியம் போலவே இருந்தாள். அவளது கண்களைப் பாதுகாக்கும் இமைகள் தண்ணீர் முத்துக்களைச் சிந்தியபடி அவனையே நோக்கியபடி இருந்தன.

அவன் எண்ணங்கள் உள்ளே நுழையும் வாய்ப்பைத் தேடியபடி இருந்தன. அங்கேயே காத்திருந்தான். ஒரு நாழிகை கடந்த பின் தண்ணீர் தேவதை தண்ணீரில் மூழ்கினாள். எங்கே போனாள்? என்று தண்ணீரின்



உறவைத் தேடும் உயிர் - 12

அடியில் நோக்கினான். அவள் பளிங்கு மீனாக மாறி எங்கோ நீந்திக்கொண்டு போனாள். இப்பொழுது உள்ளே செல்! என்று அவன் மனம் தூண்டியது. ஒன்றும் ஆகாது என்ற பாதி நம்பிக்கையோடு உள்ளே நுழைந்தான். தண்ணீரின் ஈரப்பதம் அவன் உடல் முழுதும் சில்லிட வைத்தது.

மெதுவே உள்ளே நுழைந்து, ஷோபனா எங்கே இருப்பாள்? என்று தேடும் பார்வையை வீசினான். மீண்டும் ஒரு பிரம்மிப்பு மனநிலைக்குள் நுழைந்துகொண்டு அந்த அறையை மலைப்பும் வியப்பும் கலந்து நோக்கினான்.

இதழினில் மஞ்சள் நிற ஒளியைச் சுமந்துகொண்டு காற்றில் அசைந்தாடும் தீபமாக, பறக்கும் மலர்கள் அங்கே அந்தரத்தில் மிதந்தபடியும் சில மலர்கள் கீழே விழுந்து தரை முழுதும் மோகன ஒளியை பரப்பிக்கொண்டும் அங்கே ஒரு மோகன ஜாலத்தை நிகழ்த்திக்கொண்டிருந்தன. ஆங்காங்கே வெண்ணிறக்கதிர்களை உமிழ்ந்துகொண்டு வான் மேகங்கள் கீழே படர்ந்திருந்தன. அதன் மேல் பாதங்களை வைக்கும் போது, பஞ்சின் மேல் நடப்பதைப் போன்று இதமாக இருந்தது அவனுக்கு.

ஷோபனா எங்கே? என்று தேடி அலைந்துகொண்டிருந்தான் அந்த அறையில். லேசான தூறல் அங்கே தூறத் துவங்கியது. தன் கைகளை இறுக்கிக் கட்டிக்கொண்டு நடந்தான். ஒதுங்க இடம் இல்லாததால் மழை நீரில் தன் உடலை நனைத்தபடி வந்துகொண்டிருந்த அவனை ஒரு தோட்டம் வரவேற்றது. பெரிய பெரிய மரங்கள் அவனை மழையில் இருந்து காப்பாற்ற முன்வந்ததைப் போன்று அங்கே நின்றுகொண்டிருந்தன.

நீல நிறத்தில் ஜகஜோதியாக இருந்தது அந்தத் தோட்டம். அதில் ஒரு மரத்தினடியில் சென்று நின்றுகொண்டான் வசந்தன். அவன் ஒதுங்கிய இடத்தில் வளர்ந்திருந்த மரங்கள் வித்தியாசமாய் வளர்ந்திருந்தன. பல செடி, கொடிகள்

ஒன்றோடொன்று பின்னி மேலே காளான் குடை போன்று விரிந்து, அதில் பழங்கள் கடல் அலையின் நிறத்தில் தொங்கிக்கொண்டிருந்தன.

சற்று தூரத்தில் ஷோபனாவின் கொஞ்சும் குரல் மீண்டும் கேட்டு, மழையைப் பொருட்படுத்தாமல் குரல் வந்த திசையில் சென்றான். சில மணித் துளிகளில் ஷோபனாவைக் கண்டுகொண்டான். அவள் எதைப் பார்த்து அப்படி ரசிக்கிறாள்? அவளின் முன்னே என்ன அது? தீச்சுடராய் ஓர் ஒளி வருகிறதே! என்ன அது? என்று சற்று முன்னால் நடந்து சென்று என்னவென்று பார்த்தான்.

ஓர் உருண்டையான பொருள் அவளின் முன்னே தொங்கிக்கொண்டிருதது. அது ஒளியை உமிழ்ந்தபடி பூமியில் நடக்கும் ஓர் நிகழ்வை அவளுக்குக் காட்டிக்கொண்டிருந்தது.

ஒரு கணவன் மனைவி கடும் சீற்றத்தோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். வாய்ச் சொற்கள் மாறி மாறிப் பறந்தன. இனி உன்னுடன் வாழ மாட்டேன்! என்று அந்தப் பெண் கத்தினாள். கணவனும் தன் கோபத்தைக் காட்ட கோபமாக ஒரு பொருளைத் தூக்கி உடைத்தான்.

களேபரமாக நடந்துகொண்டிருந்த அந்த நிகழ்ச்சியை, ஷோபனா மிகவும் ரசித்துக்கொண்டிருந்தாள்.

இதையா ரசிக்கிறாள்? என்ன பெண் இவள்? ஒரு குடும்பம் பிரியப் போவதை மகிழ்ச்சியாக ரசிக்கிறாளே? என்று வெறுப்பான எண்ணங்களை மனதினுள் மூட்டினான், வசந்தன். சரி, என்ன தான் நடக்கிறது? என்று பாப்போம் என்று மீண்டும் பூலோக நிகழ்வைக் காட்டும் திரையை நோக்கினான்.

சண்டை முடிந்து கணவன் வேலைக்குச் சென்றுவிடுகிறான். மனைவி மெத்தையில் அமர்ந்து முகத்தை இரு கைகளால் மூடிக்கொண்டு அழுகிறாள். ஏன் தான் இவரைக் கல்யாணம் செய்துகொண்டேனோ? என்று தன்னையே சபிக்கிறாள்.

அதையும் ஷோபனா சிரித்த முகத்தோடு ரசித்தாள். வசந்தன் ஷோபனாவை விழுங்குவது போல் பார்த்துக்கொண்டே திரையையும் நோக்கிக்கொண்டிருந்தான்.

அழுதுகொண்டிருந்த மனைவி சிறிது நேரத்தில் உறங்கிவிட்டாள்.

அதையே வெறித்துக்கொண்டிருந்தாள் ஷோபனா. வசந்தனுக்குப் பொறுமை இழந்துவிட்டது. அங்கிருந்து செல்லலாம் என்று எண்ணுகையில் ஓர் அற்புதமான நிகழ்வு ஒன்று நடந்தது.

வானத்திலிருந்து மிதந்து வந்த ஒரு சின்னஞ் சிறிய மலர் மொட்டு நீலப் பச்சை நிறத்தில் மிளிர்ந்துகொண்டே ஷோபனாவின் கைகளில் தஞ்சம் புகுந்தது. அதைச் சிறிது நேரம் மென்மையான விழிகளில் நோக்கிய அவள், அதனைத் திரையைப் பார்த்தபடி நீட்டினாள். அவளின் கையிலிருந்த ஒளி திரையை நோக்கிச் சென்று, படுத்திருந்த அந்தப் பெண்மணியின் வயிற்றில் சென்று மறைந்தது.

என்ன நடக்கிறது? என்று குழம்பினான் வசந்தன்.

வயிற்றினுள் சென்ற அந்த ஒளி, ஒரு கருவாக உருப்பெற்றது. அப்பெண்ணின் குருதியில் கலந்து அந்தக் கரு அமைதியாக படுத்துக்கொண்டதை ஷோபனாவும் வசந்தனும் நோக்கிக்கொண்டிருந்தார்கள். வசந்தன் தன்னையறியாமல் ஷோபனாவின் அருகில் சென்றான். கருவையே கவனித்துக்கொண்டிருந்தான்.

"அழகாக இருக்கிறதல்லவா?" என்று குரல் எழுப்பினாள் ஷோபனா, கருவைப் பார்த்தபடி.

யாரைக் கேட்கிறாள்? என்று சுற்றி நோட்டமிட்டு, தன்னிடம் தானா? என்று எண்ணித் திரு திருவென்று விழித்தான்.

"உங்களிடம் தான்" என்று அவனை நோக்கினாள் ஷோபனா.

"நான் உங்கள் கண்ணிற்குத் தெரிகிறேனா?" என்று அதிர்ச்சியோடு வினா எழுப்பினான் வசந்தன்.

"நன்றாகத் தெரிகிறீர்கள்" என்று புன்முறுவினாள் ஷோபனா.

"ஆனால்,.. நான்..." என்று கூறியபடி மாயப்பதக்கத்தை அவளிடம் காட்டினான் வசந்தன்.

"இந்த அறையில் எந்த மாயமும் பலிக்காது"

## *விழி வாழி!!!*

*பூங்கோதை*



*பாசம் காட்டிப் பணிய வைக்கும் விழிகள்*
*ஓசையின்றி உயிர் செதுக்கும் உளிகள்*
*நேசத்தோடு தாங்கிக் கொள்ளும் தூண்கள்*
*நெடும் இருளில் ஒளிரும் விண் மீன்கள்*

*ஒற்றை மொழிக்கு உயிர் கொடுக்கும் கருவி*
*குற்றம் கண்டு அனல் பொழியும் குமுறி*
*இற்றைவரையில் அன்பைச் சுரந்த அருவி*
*கற்றுக் கொள்ளப் பாய்ந்து ஏகும் புரவி*

*துவண்ட போது தூங்க வைத்த தூளி*
*உணரமுடியா மொழிகள் கொண்ட ஆழி*
*உணர்வை அணைத்து உரம்கொடுத்த விழிநீ*
*உலகில் உறவாய் நீடு காலம் வாழி!!!*

"மன்னிக்கவும்! நான் உங்களைப் பின்தொடரவில்லை. எதேச்சையாகத் தான் வந்தேன். வந்த இடத்தில் ஒரு பெண் கருவுற்றதை நோக்கினேன். மெய் சிலிர்த்தேன்" என்றான், வசந்தன்.

ஏந்திழலான ஷோபனா அவன் கண்களை ஊடுருவினாள்.

வசந்தன் லேசான குற்றஉணர்ச்சியோடு தலையைத் தாழ்த்தினான்.

"மழைக் கன்னி உங்களைத் தாக்கினாளா?" என்றாள்.

யாரைச் சொல்கிறாள்? என்று முதலில் விழித்த வசந்தன், தன்னை உள்ளே போக அனுமதிக்காத தண்ணீர் தேவதையைத் தான் சொல்கிறாள் என்று நொடிப்பொழுதில் யூகித்தான்.

"அப்படி ஒன்றும் இல்லை"

"நான் தான் உங்களைத் தாக்க வேண்டாம் என்று சொன்னேன், உங்களிடம் ஒரு கேள்வியைக் கேட்கவேண்டும் என்று"

"இங்கு வந்ததிலிருந்து பதில் தெரியாத பல கேள்விகள் என்னைத் தினமும் கொல்கின்றன. இதில், இன்னொரு கேள்வியா?"

அவள் மௌனமாக முன்னே நடந்து சென்றாள். அவளின் அஞ்சன விழிகளும் மலர்ப் படுக்கையான உதடுகளும் எதையோ கேட்கத் துடித்தன என்பதைத் தெரிந்துகொண்ட வசந்தன், அவள் பின்னே சென்றான்.

"மெமோரியல் உலகம் எப்படி உங்கள் கண்ணிற்குப் புலப்பட்டது?" என்றாள் மெல்லிய குரலில், சிறிது அதிர்ச்சியைக் கலந்து.

"எனக்கே தெரியவில்லை. என் நண்பன் ராஜீவ் கூட யார் கண்களுக்கும் புலப்படாத மர்மம் என்று கூறினான்"

அவள் சிந்தனையாய் தலையசைத்தாள். அவளின் சிந்தனை ஓட்டம் வேகமாக ஓடியது. அவள் என்ன எண்ணுகிறாள்? என்று வசந்தனால் யூகிக்க முடியவில்லை. அதனால் பேச்சை மாற்ற எண்ணினான்.

"நாம் திரையில் கண்ட கணவன் மனைவி சண்டையிடுவதைப் பார்த்து ரசித்தீர்களே. அவர்கள் பிரிவதில் உங்களுக்கு அவ்வளவு மகிழ்ச்சியா?"

"நான் அவர்களின் சண்டையை எண்ணிச் சிரிக்கவில்லை. அவர்களின் அறியாமையை எண்ணிச் சிரித்தேன். பிரிய வேண்டும் என்று எண்ணியவர்களை அந்தக் கரு ஒன்று சேர்த்து சந்தோஷ உலகினுள் அவர்களை அழைத்துச் செல்லும்"

அப்பொழுது தான் புரிந்தது வசந்தனுக்கு, தான் அவளைத் தவறாக எண்ணிக்கொண்டோமே என்று. தன்னையே மனதினுள் கடிந்துகொண்ட அவன் மௌனமாய் நடையைத் தொடர்ந்தான். வழியில் செடியில் தொங்கிக்கொண்டிருந்த கருநிறப் பழத்தைப் பறித்து அவனிடம் நீட்டினாள்.

"இதை வாயில் போட்டுக்கொள்ளுங்கள். யார் கண்களுக்கும் புலப்படமாட்டீர்கள். நீங்கள் விரைவில் வெளியேற வேண்டும். இல்லையேல் ஆபத்து"

அவள் பொய்யாக எச்சரிக்கிறாள் என்று எண்ணிக்கொண்ட வசந்தன், "சிறிது நேரம் உங்களோடு இவ்விடத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் செல்கிறேனே?" என்று சிரித்த முகத்தோடு கூறினான்.

ஷோபனா அவனை உற்றுநோக்கி நடையைத் தொடர்ந்தாள். அப்பார்வையில் ஆயிரம் அர்த்தங்கள் ஒளிந்திருந்தன. அந்த அறையை விட்டு வேறு அறைக்குச் சென்றனர். அந்த அறை முழுதும் வெண்ணிற மேகங்களால் நிரம்பியிருந்தது. அதில் முத்துக்களாய் நட்சத்திரங்கள் மின்னின. ஒரு சிறு பாலம் தென்பட்டது. அப்பாலத்தில் நடந்து சென்றனர், வசந்தனும் ஷோபனாவும்.

வசந்தனின் எண்ணங்கள் ஷோபனாவின் மீதே படிந்திருந்தன. ஏன் காரணமே இல்லாமல் இவளைத் தேடிச்செல்கிறேன் என்று எண்ணினான். இவள் மேலுள்ள இனம் புரியா ஏதோ ஓர் உணர்வு தான் காரணம். நிச்சயம் அது காதல் அல்ல என்று எண்ணிக்கொண்டான்.

பாலம் நீண்டுகொண்டே போனது. தூரத்தில் ஒரு பெரிய பாறை அந்தரத்தில் நிற்க, அப்பாறையின் மீது ஒரு மாளிகை எழும்பி இருந்தது. மிதமிஞ்சிய பிரம்மிப்பை கண்களில் படரவிட்ட வசந்தன் இன்னும் எத்துணை மர்மங்களில் நான் தத்தளிக்கப் போகின்றேனோ? என்று எண்ணிக்கொண்டான். சரியாக ஒரு நாழிகையில் அம்மாளிகையினுள் சென்றனர். பல அறைகள் குழுமியிருந்த மாளிகையில் உள்ள ஒரு அறையினுள் பிரவேசித்தார்கள்.

சுற்றியெங்கும் பனி படர்ந்திருந்த அவ்வறையினுள் நீண்ட ஒரு வெளிச்சம் விண்ணைத் தாண்டி சென்றுகொண்டிருந்தது. அதன் அடியில் ஒரு வயதான பெண்மணி குளிர் உள்ளே நுழைய முடியா ஆடையை உடுத்திக்கொண்டிருந்தார். அவர்களின் அருகில் சென்று ஷோபனா நின்றாள். அவள் பின்னே வசந்தனும் நின்றான்.

ஷோபனாவைப் பார்த்து வயதான பெண்மணி, சிறு புன்முறுவலை உதிர்த்துவிட்டு வெளிச்சத்தை நோக்கினார். அவ்வொளி கானல்நீரைப் போல் தெளிவில்லாமல் ஒரு நிகழ்வைக் காட்டியது. அக்காட்சியைக் கண்டதும், வசந்தனின் உடல் உறைந்துவிடும் அளவிற்கு மாறியது.

அவன் கண்ட காட்சியில், மருத்துவமனையில் இளவயதுப் பெண் உயிருக்குப் போராடிக்கொண்டிருந்தாள். அவளது கண்கள் மேலே எதையோ நோக்கியபடி சீரற்ற மூச்சு நாசி வழியே

வந்தபடியும், அவளின் உடலில் மெல்ல மரணம் படர்வதை அவள் உணர்ந்துவிட்டதைப் போன்றும் அவள் துடித்தாள். அவளின் வாய் குழறியது. அவளது நெஞ்சு லேசாகத் துடித்தது. சில நிமிடங்களில் அவள் இறந்து போனாள். அவளின் உயிர் ஒளி அவளின் உடலை விட்டுப் பறந்து சென்றது.

அவற்றையெல்லாம் பார்த்த வசந்தனுக்கு மயக்கமே வந்துவிட்டது. கண்ணில் நீர் பூத்தது. சிந்திய கண்ணீரோடு அவன் ஷோபனாவை நோக்கினான். அவளது விழிகளில் சாந்தம் நிலவியது. இதழில் அதே புன்னகை.

இவ்வாறு நடந்துகொண்டிருந்த சமயத்தில், சுயம்பு முகிலனின் அறையினுள் வேகமாக நுழைந்தார்.

"அரசே ! அரசே!" என்றார் பதற்றத்துடன்.

"என்ன சுயம்பு, ஏன் இந்த அவசரம்?
"நம் மெமோரியல் உலகில் புதியவன் ஒருவன் நுழைந்துவிட்டான்"
"என்ன சொல்கிறீர்? யாரது?" என்று பொங்கி எழுந்தார் முகுந்தன்.

"தெரியவில்லை மன்னா. ஆனால், புதியவன் இங்கே உலாவுவது மட்டும் நிஜம்"

மன்னர் முகிலன் கண்களை மூடி எதையோ முணுமுணுத்தார். நெருப்பினாலான ஒரு கொடிய மிருகம் மெமோரியல் உலகினுள் பறந்து சென்றது.

நெருப்பு மிருகம் வருவதைத் தெரிந்துகொண்ட ஷோபனாவின் முகம் கலவரமானது. வசந்தனை நோக்கி, 'சீக்கிரம் செல்! ஆபத்து' என்பதைப் போன்று நெருப்பு மிருகத்தின் பிம்பத்தை உள்ளங்கையில் வரவழைத்து எச்சரிக்கையை. 'சீக்கிரம் கிளம்பு' என்று அவசர சமிக்ஞை கொடுத்தாள்.

புரிந்துகொண்ட வசந்தன் அங்கிருந்து ஓடினான். மெமோரியல் உலகில் நெருப்பு மிருகம் தனது இறக்கைகளை விரித்துக்கொண்டு உள்ளே வந்ததைக் கண்டு, மெமோரியல் உலக வேலையாட்கள் அலறியபடி ஓடினர். நெருப்பு மிருகம் அவர்களைக் கண்டுகொள்ளாமல் வசந்தனை நோக்கிப் பறந்து சென்றது. வசந்தன் பாலத்தைக் கடந்து உள்ளே வந்த சமயத்தில் கடும் அனல் அவன் உடலைத் தழுவியது. என்ன இது? குளிரான பிரதேசத்தில் அனலால் உடல் சுடுகிறதே? என்று எண்ணிக்கொண்டிருக்கும் சமயத்தில் பெரும் அலறல் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டான்.

நெருப்பு மிருகத்தின் அலறல் சத்தம் தான் அது. அது அவனை நோக்கிப் பறந்து வந்தது. என்ன செய்வதென்று அறியாமல் சிலையாகிப்போனான் வசந்தன்.

நெருப்பு மிருகம் அவனை விழுங்க விரைந்த நிலையில், தேவதையான ஒரு பெண் அங்கே தோன்றினாள். அவள் நீல நிறத்தில் அங்கி போன்ற ஆடையை அணிந்திருந்தாள். அந்த ஆடையின் ஒரு பகுதியால் தன் பின்னந்தலையை முக்காடிட்டு மறைத்திருந்தா. அதைத் தாண்டி அவளின் குழல்கள் வெளியே படர்ந்து அழகு கூட்டியது. தெளிவான நீரைப் போன்ற இரு விழிகள். மஞ்சள் நிற மேனியும் வதனமும் உடையவள்.

அவள் ஒரு அடி முன்னே எடுத்து வைக்க வைக்க நெருப்பு மிருகம் பின்னே சென்றது. பிறகு, அவள் தன் கையில் வைத்திருந்த குடுவை போன்ற ஒரு விளக்கினைத் திறந்தாள். அதிலிருந்து ஓர் உருவம் வெளி வந்து அவளைப் பார்த்தது. அவ்வுருவம் ஒளி அலைகளால் வார்த்தெடுக்கப்பட்ட சிறு உயிர் போல இருந்தது. அந்த உருவத்தை நெருப்பு மிருகத்தின் மீது ஏவினாள். அந்த உருவம் தன் ஒளி அலைகளை நெருப்பு மிருகத்தின் மீது பாய்ச்சி அதைப்

## *மாறிடாத மனம்...*

*கனகீஸ்*



*எத்தனை எத்தனை நாட்களை நான்*
*யுகமென கழிப்பேன் உன் நினைவில்?...*
*சுவாசிக்க மறந்து நான் போனாலும்*
*நேசிக்க மறந்து நான் போவேனோ?...*

*மலரென நானும் மலர்ந்திருப்பேன் _ உன்*
*வருகைக்காய் தினம் தினம் தவமிருப்பேன்*
*வரம் தர நீயும் வந்து விடு உன்*
*வார்த்தைகள் பரிசாய் தந்து விடு....*

*சின்ன சின்ன ஆசைகளாய் ஓராயிரம்*
*கிடக்குது என் உள்ளே _ வண்ண*
*வண்ண கனவு தந்து நீ வர்ணம்*
*கலைத்தது சரியில்லே....*

*நான் தேடிப் பெற்ற நல் முத்தை*
*கடலினில் திரும்பவும் வீசுவதோ?...*
*பிள்ளைகள் கட்டிடும் மண்வீடோ ?*
*நாம் பேசிச் சிரித்தது பொய் தானோ?*

*போ போ என நீ சொன்னாலும்*
*போய்விட நானும் மாட்டேனே...*
*உயிரென நீயும் இருக்கையிலே*
*உடல் நான் உனைவிட்டு போவதெங்கே?*

*வாசனை தந்திடும் மலரெல்லாம்*
*வாடிப் போய்விடும் ஒரு நாளில்...*
*பாசம் தந்திடும் என் உள்ளம்*
*மாறிப் போகாதென்னாலும்....*

பயமுறுத்தி விரட்டியடித்தது. இறுதியில் பேரொலியை எழுப்பியபடி பறந்து சென்றது.

ஏன் நம்மைத் தாக்காமல் மிருகம் பறந்து சென்றது? என்று புரியாமல் தடுமாறிய வசந்தன், பின்னால் இருந்த ஏந்திழையை நோக்கினான். அவளின் இளநகை அவனைக் கவர்ந்தது. பேச்சில்லாமல் நின்றான் வசந்தன்.

"பயப்படாதீர்கள்! அது உங்களை ஒன்றும் செய்யாது"

ஆயினும், அவன் பேசவில்லை. அவள் அழகிலே லயித்துப் போயிருந்தான். அவள் விழிகளின் ஓரம் துளிர் இலை போல் வண்ணம் தீட்டியிருந்ததை அவன் ரசித்தான். அவள், அவனின் முன்னே வந்து நின்றாள்.

வசந்தன், நிம்மதி மூச்சை நாசியின் வழியே விட்டெறிந்து, "காப்பாற்றியதற்கு நன்றி" என்றான்.

"நன்றி வேண்டாம். வாருங்கள். உங்களை நான் வெளியில் கொண்டுசென்று விடுகிறேன்" என்று கூறியபடி முன்னே நடந்தாள். அவளின் பின்னே மாயவலையில் கட்டுண்டதைப் போல் வசந்தன் சென்றான்.

வேலையாட்கள் நெருப்பு மிருகத்தால் ஏற்பட்ட சேதங்களைச் சரிசெய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் செல்வதை யாரும் கவனிக்கவில்லை. அது வசந்தனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. முன்னே செல்பவள் சாதாரணமானவள் அல்ல என்பதை மட்டும் மனது எடுத்துக் கூறியது. விரைவிலேயே சோலையைக் கடந்து மரக்கலம் இருக்கும் இடத்தை அடைந்தனர். கடல் அலைகள் சந்தோஷ அலைகளாய்க் கரையெங்கும் தழுவியபடி இருந்தது.

வசந்தன் அவளைப் புரியாமல் நோக்கினான். "தாங்கள் யார்?" என்று வினவினான்.

"ஒரு பெண்" என்று அலட்சியப் பதிலை ரசிக்கும்படி கூறினாள்.

"அது தெரிகிறது. என்னைக் காப்பாற்றியதற்குக் காரணமென்ன?"

"மனிதாபிமானம்"

"அதற்கு மேல் அவனுக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை"

"சரி, நான் வருகிறேன்" என்று வசந்தன் மரக்கலத்தில் ஏற முற்பட்ட சமயத்தில், "ஒரு நிமிடம்" என்ற அப்பெண்ணின் குரல் அவளை நோக்கி அவனைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. என்ன என்பதைப் போல் நோக்கினான்.

"ஓர் உதவி!" என்றாள் புன்னகையோடு.

"உதவியா? என்னிடமா?"

"ஆமாம். உங்களால் நிச்சயமாகச் செய்யக்கூடிய உதவி தான்"

தன்னைக் காப்பாற்றியவள் என்று எண்ணிய வசந்தன், "என்ன செய்யவேண்டும்?" என்றான்.

கையடக்க சிறு பெட்டியை அவனிடம் கொடுத்தாள் அவள். முழுக்க முழுக்க வைரங்களாலான சிறு பெட்டி அது. அதை வாங்கி அவளை நோக்கினான் வசந்தன்.

"ஓல்ட்மனிடம் இதைக் கொடுங்கள்" என்றாள் அப்பெண்.

வசந்தனுக்கு தூக்கிவாரிப்போட்டது. "ஓல்ட்மன்னா?" என்றான் அதிர்ச்சியோடு.

"ஆமாம். உங்களுக்குத்தான் அவரைத் தெரியுமே? சந்தித்தீர்கள் தானே? அவரிடம் கொடுத்துவிடுங்கள். வடக்கு திசையை நோக்கி சென்றால் அவர் இருக்குமிடத்தை அடையலாம்" என்று கூறியபடி மறைந்து போனாள் அந்தப் பெண்.

வசந்தனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவன் உத்தரவு இல்லாமலே மரக்கலம் வடக்கு திசையை நோக்கிச் செல்லத் துவங்கியது. அப்பொழுது தான் புரிந்தது வசந்தனுக்கு. அவள் தான் மரக்கலத்திற்குக் கட்டளை பிறப்பித்திருக்கிறாள் என்று.

குழப்பத்தோடு மரக்கலத்தில் உட்கார்ந்தபடி, கையில் பெட்டியைத் தாங்கிக்கொண்டு சென்றுகொண்டிருந்தான் வசந்தன். அவன் மரக்கலத்தில் பயணத்தை மேற்கொண்டிருந்ததை ஓல்ட்மன் மாயக்கண்ணாடியில் பார்த்துக்கொண்டிருந்தார்...

***தேடல் தொடரும்...***

*என்னை கண்டு ஓடி*
*வருபவள் இப்போதும்*
*அதையே செய்கிறாள்*
*எதிர் மறையாக ...!!!*

*கே இனியவன்*

# திசை மாறுமோ ?

கிரிகாசன்

## பகுதி 5. (தேசத்தின் ஒரு புறம்)

பூங்கணை எய்தவன் புண்படுமேனியை
போதையிடும் ஒருத்தி - இரு
தேங்கிய கண்களில் தித்திக்குதோ எனும்
தேவை பார்த்திருக்க - அவள்
தாங்கிய கைகளில் தாமரைபூ இதம்
தன்னை உணர்ந்தவனாய் - அங்கு
ஆங்கவள் மேனியில் அத்தனைஇன்பமென்
றன்பில் திளைத்தவனை

ஆனந்த போதையில் வானில் மிதந்தவன்
ஆற்றலில் தூரநின்றே - இனி
தேனது மாந்திய வேளையில் திடுமென
தடதடவெனும் சத்தம் - அட
ஏனது கூச்சலும் இத்தனை சத்தமும்
என்றயல் கேட்டெழவும் - ஆ
போனதுன் உயிருடன் புறப்படு காத்திட
பின்னிருந் தொலி கேட்டான்

மன்னவனே தமிழ் சொல்லுவதால் உமை
மரணத் தேவியவள் - இனி
தன்னுடைகரமதில் தாங்கிட வருகிறாள்
தருமம் காக்குமெனில் - ஒரு
மின்னும் கணந்தன்னில் விட்டுபறந்திடு
மேனியும் வேண்டுமெனில் - உடன்
என்றவன் இயம்பிட இருக்கைவிட்டுமே
எழுந்தான் வழி நடந்தான்

கொல் உடன்கொல் என்று கூறித்துடித்தனர்
கொன்றே இனமழிப்போர்- பொய்
நில்லென உள்ளமும் சொல்லிடு ம்போதிலும்
நிர்க்கதி என்றுணர்ந்தான் -இவர்
வெல்லென வீணரை வேண்டின உதவிய
வெற்று மதித்திறமும் - போய்ச்
சில்லெனும் உணர்வுகள் சீரளித்தேன் எனும்
சிறுமை யுணர்ந் தகன்றான்

கேட்டு ஒலிதிட்ட கூச்சலுக்கிடையினில்
கிழக்கொரு மண்டபத்தில் - எழிற்
பாட்டுமிசைத் தொலி கூட்ட மலர்க்கொடி
போலொரு கோதை நடம்- தனும்
ஆட்டமும் கொண்டிட ஆனந்தம் மேலிட
ஆகும் நிலைமை தனை இந்த
நாட்டைப் பிடித்திட்ட நஞ்சவ ரோடுடன்
நின்றவன் கண்டு கொண்டான்

தீட்டிய வேல்விழி திங்களெனும் முகத்
தேவதை ஆடிநிற்க - அவள்
பூட்டிய கொல்லெனும் பூமலர்பாதப் -
புறத்திரு பொற்சதங்கை -உடன்
காட்டிய தோஒலி கொல் என்றொலித்திடக்
கேட்டவன் தன்நிலையை
சாட்டியதாய் பழிகொண்டு நகைப்பினைச்
சார்ந்தது போலிருக்க

கூட்டியதாரென கோபங்கொண்டு ஆ
கோதை நிறுத்துமென்றான்
தீட்டிய பொன்விழி திக்கில் திரும்பிடத்
தேவதை போலெழிலாள்
காட்டிய ஏளனம் கண்களில் மின்னிட
கன்னம் சிவந்தவளோ
ஆட்டம் நிறுத்திடும் எண்ணமில்லை அவள்
அவள் ஆடிக்கொண்டே யிருந்தாள்

வாட்டிய துன்பமும் அஞ்சும் மனத்துடன்
வந்த இடர்நிலையும்
கேட்டகொலை யெனும் கூச்சலும்சத்தமும்
கனவோ முறையறிய
ஈட்டி பிடித்தொரு சேவகன் நின்றிட
யாரங்கே என்றழைத்தான்
காட்டிவிரல் கொண்டு ஏவிய மன்னனை
காணா தவன் நடந்தான்

நாட்டிடை குறுநிலம் ஆளுவன் என்றொரு
நாமம் எனக்கெதற்கு
வீட்டினில் ஆடவன் கொள்ளும் மதிப்பதும்
வீழ்ச்சி யென்றே யிருக்க
தேட்டமும் செல்வமும் தந்தவர் நெஞ்சினில்
தீமை விஷம் இருக்கும்
காட்டிய அன்பிலும் கையணைக்கும் விதம்
காரணம் வேறிருக்கும்

வெட்ட வளர்த்திடும் ஆட்டின்நிலையென
வீரமும் விட்டுலைந்து
குட்டவும் குனிந்திடும் குவலய வாழ்வதில்
கொண்ட மகிழ்வுமென்ன
விட்டபிழைகளை முற்றும் திருத்திட
வேளை பிறந்திடுமோ
திட்டமிட்டே திசை மாற்றி நடந்தனன்
தேவை திருப்பமொன்றோ

போகட்டும் என்றுள முள்ளே குமுறிய
போதிலும் நொந்து மனம்
தீகொட்டும் வேதனை செல்லாக் காசென
சில்லறை யாக்கியதேன்
போர் கொட்டும்மேளமும் பொல்லாப்பகைதனை
பொற்றமிழ் மோதிநிற்க
வாய்கட்டி மௌனமும் வார்த்தை கெட்டேமனம்
வாழ்ந்திடும் தேவையென்ன

## 6 ம் பகுதி. ( கொடுங்கோரம்)

அன்னை அழுதாள் பிள்ளை அழுதான்
அன்புக் குலமாந்தர்:
மின்னும் இடிகள் கொல்லும் வெடிகள்
முன்னாற் கண்டழுதார்
மன்னன் ஆணை கொல்என்றார்கள்
மரணப்பசி கொண்டே
இன்னுமின்னும் மின்னும்வேகம்
எத்தனை ஆயிரங்கள்

கெஞ்சும் குரல்கள் அஞ்சும்கண்கள்
ஆகா போதை கண்டார்
வஞ்சம் கோபம் வழியும் குருதி
வானப் பிரவேசம்
அஞ்சும் கதறல் ஆறாத்துயரம்
அவலத்தின் எல்லை
மிஞ்சும் வெறிகள் மிரட்டும் சத்தம்
மின்னும் கைவாள்கள்

பிஞ்சுகுழந்தை பேசத்தெரியா
பிதுங்கும் விழிப்பார்வை
பஞ்சுகைகள் பாவமில்லை
பிறந்தோர் பழிதோஷம்
நெஞ்சம் கதறித் துடித்தாலென்ன
நிலமோ அவர் சொந்தம்
நஞ்சு தூவல் நடுங்குமுள்ளம்
நரகத் தலைமை இதோ

பயணம்

போகும்பாதை சொன்னான் அந்தோ
புரவியின் முதுகேறி
ஏகும் வழியைப் புரியாமல்இவ்
இடரில் தவிக்கின்றான்-
வேகங் கொண்டேஓடும்குதிரை
விரையும் வழிமீது
ஆகும் எதனால் அஞ்சித்தானும்
அடங்கா தோடியது

வெள்ளை மீன்கள் வானக்குளத்திலே
விந்தை கண்சிமிட்ட
கொள்ளிப் பேயாய் குட்டைவெளியில்
குறுந்தீ நின்றாட
நள்ளிர வாகும் போதில் எங்கே
நானும் என்றவனை
துள்ளிச்சென்ற குதிரை நிற்க
தூங்கும் விழிநோக்க

செத்தோர்ப் பாதி சாகும்பிணங்கள்
சரிந்தே வீழ்ந்திருக்க
கத்தும் அலறல் கைதுண்டாகி
காற்றில் மணம் வீச
அத்தனைகோரம் அன்னைமண்ணில்
யாரால் இது வெல்லாம்
சத்தம்போட்டு கத்திக்கொண்டான்
என்னால் என்னாலே

அழுதான் மனதில்ஆயிரம் கோடி
அகந்தை வெடித்தோட
பழுதாய்போற்றும் பாவம் தீயில்
பஞ்சாய் பொறிகொள்ள
எழுவாய் உந்தன் உள்ளக் கயமை
உடைபட விதிமாற
தொழுதான் அறமொடு திருந்திய உள்ளத்
திடையோர் திசைமாற

திருப்பம்

பொங்கும் கடல்தனும் பொங்குவதேனென் இவர்
பொங்காநிலைகண்டோ
செங்கதிர் தானும் சிவந்ததுமேன் இச்
சினத்தின் வழிகண்டோ
கங்குல் விடிந்தொளி கொண்டது காலை
கதிரவன் பகைவெல்ல
எங்கும் இருள் கரைந்தோடின இரவின்
கொடுமைப் பிடிவிலக

தொங்கிவிழும் அப்புரவியின் முதுகிடை
துள்ளித் தொற்றியதும்
தெங்குபனவளர் தீந் தமிழ் நாட்டின்
தெருவில் விரைவாக
எங்கும் இலங்கிடு தெய்வபுகழ்திரு
இறையவள் இடம்நோக்கி
பொங்கும்சுடரொளி புலர்ந்திடும்வேளை
போய்வழி அடைகின்றான்

## திசை மாறியதோ 7ம் பகுதி

நொங்கு வளர் பெரு நெடிதெனும் பனைகள்
நெருநெரு என்றொலிக்க
தொங்கும் பனையிடை காய்ந்திடும் ஓலை
தென்றல் தொடக்கூசி
அங்கிங் கெனவும் ஆடிடும் ஓசையும்
அரண்மனை கொடிமுகமாய்
எங்கு மெழுந்திடும் ஓசையைக் கேட்டதும்
அரண்டிடும் புரவி நிற்க

ஓங்கிய கோபுரம், உச்சியிற்பொன்முடி
உதயக் கிரகணங்கள்
தாங்கியே தகதக எனுமெழில் மின்னிய
தனையே நோக்கியதாய்
ஏங்கிய மனதுடன் இளவய துடையவன்
இறையவள்தனை வேண்ட
தேங்கிடும் பயமெழ திரையிடும் விழிநீர்
தொட்டிட உட்சென்றான்

செந்நிறத் தீயாய் திக்கிலெழுமத்
திருமகள் சிலைமுன்னே
சுந்தர நிலவின் ஒளி பெறு வானில்
சாமரைமுகில் வீச
தந்திடும் மளவில் தன்முகவண்ண,
தண்முகம் அழகென்றே
சிந்திடுமா பய செம்மையில் வானடி
செவ்வரி வடிவாக

வீரத்தாயவள் முன்னே வந்தோன்
வீழ்ந்தே கிடக்கின்றான்
நீரைப்பிரிந்த ஆம்பல் போலே
நீளக் கிடந்தோனை
ஓரக் கண்ணால் வீரத்தாயும்
விழி கொண்டே கண்டு
யாரப்பாநீ கேளாயென்றே
கூறும் மொழிகேட்டான்

வெள்ளி முளைக்கும் முன்னே நீயும்
வீரம் பெறவேண்டும்
அள்ளி யெடுத்தே ஆற்றல்கொண்டும்
அதிரும் நடைவேண்டும்
தெள்ளென அறிவும் திடமும்பார்வை
தீயென ஒளிவீசி
கொள்ளையர்பூமி கொடுமைகள் நீங்க
குமுறும் மனம் வேண்டும்

தீயன கண்டே தேசப்புதல்வர்
தேர்ந்தோர் வழிநோக்கி
தூயன எண்ணித் தோள்களில் பாரம்
தூக்கும் நிலைவேண்டும்
தாயெனப் போற்றி தாய்மண் காக்கும்
தன்மை பெறவேண்டும்
தேய்ந்துவிடாது திசையை மாற்றும்
திருப்பங்கள் வேண்டும்

(முற்றும்)

(இந்தத் திசை மாறி நடந்தவர்கள் திரும்பி சரியான பாதையில் ஒற்றுமையாக செல்லாதவரையும் விடுதலைக்கான பாதை மிகமிகத் தொலைவாகவே இருக்கும் !)

# நான் கதை சொல்கிறேன்..

*கனகீஸ்*



**நா**ன் அழுக்கு படிந்த என் கரங்களை அழுந்த துடைத்த படி நிற்கிறேன். என் மனம் நான் வாங்கப் போகும் ஊதியத்தை கணக்கு போடுகிறது. இம்மாதம் நான் விடுப்பின்றி வந்திருக்கிறேன். வழக்கமான ஊதியத்திற்கு மேல் ஊக்கத் தொகையும் வழங்கப் படும் விடுப்பு எடுக்காமல் வந்தால் என மேனேஜர் முருகேசன் போன மாதம் சம்பளம் கொடுக்கும் போதே சொன்னதால் விடுப்பு எடுக்க கூடாதென முயன்று வந்திருந்தேன் இம்மாதம் முழுதும். அளவுக்கதிகமான காய்ச்சல் வந்த போதும் மாத்திரை மட்டுமே போட்டுக் கொண்டு வேலைக்கு வந்திருந்தேன்.

வரிசையில் நான் பின் தங்கியிருக்கிறேன் எனக்கு முன் இருப்பவர்கள் ஊதியம் பெற்றக் கொள்ளும் வரை நான் வரிசையில் காத்திருந்தே தான் ஆக வேண்டும். மாதம் முழுதும் உழைத்த கலைப்பு கூட தெரியவில்லை ஆனால் இப்படி ஊதியம் பெற வரிசையில் நிற்பது கால்களை நோகச் செய்கிறது. இருப்பினும் நாம் பெறும் ஊதியம் இம்மாதம் தன் மகனின் நீண்ட நாள் கனவை நிறைவேற்றப் போகிறது என நினைக்கையில் கால் வலி பெறிதாய் தோன்றவில்லை.

என்னை பற்றிய சிறு விளக்கம். நான் நாற்பத்தைந்து வயதை கடந்து மூன்று மாதங்கள் ஆகிறது. நூற்பாலையில் தொழிலாளியாய் கடந்த இருபது வருடங்களாய் பணியாற்றி வருகிறேன். என் மனைவியும் என் மகனுமே எனக்கு இருக்கும் உறவு. இன்று வரை அவர்களுக்காய் தான் நான் உழைத்துக் கொண்டிருக்கிறேன். என் இருபது வருட உழைப்பின் பயனாய் நான் பெரும் ஊதியம் சிறிது சேமிப்பில் போட்டு வைக்கப் பட்டுள்ளது. என் மகனின் நீண்ட நாள் ஆசை புதிதாய் ஒரு இருசக்கர வாகனம் வாங்க வேண்டுமென்பது.

அப்பா ஒரு பத்தாயிரம் இருந்தால் போதும் தவணை முறையில் வாங்கிவிடலாம். என்னுடன் கல்லூரியில் பயிலும் மதன் கூட புதிய வகை வாகனம் வாங்கியிருக்கிறான், அவனின் அப்பா உங்களுடன் வேலை செய்பவர் அவரால் முடியும் போது உங்களால் மட்டும் ஏன் முடியாது? என்னால் எந்த பதிலும் சொல்ல முடியவில்லை. இது வரை அவன் ஒற்றை பிள்ளையென நான் அவன் கேட்கும் முன் அனைத்தும் வாங்கித் தந்திருக்கிறென், இவனுக்கு இருசக்கர வாகனம் வாங்கித் தர வேண்டுமென எனக்கு தோன்றவே இல்லை.

என் மனைவி அன்னம் என் பிள்ளையை கடிந்து கொண்டால். "ஏண்டா உனக்கு இப்ப வண்டி கேட்குதா "

"அப்பா அஞ்சு மைல் தினமும் சைக்கிள் மிதித்து கொண்டிருக்கிறார். உனக்கென்ன இப்ப வண்டிக்கு அவசரம் பதிவுசா பஸ் ஏறினா காலேஜிக்கு பக்கதிலேயே இறங்கிக்கலாம்"என்றவளை நான் அதட்டி அடக்கினேன்.

பிள்ளை முகம் வாடிப் போகுது பாரு அவனுக்கு இல்லாம யாருக்கு நா இப்பிடி ஓடிஓடி உழைக்கிறேன்.? நீ கம்முனு இரு எனக்கு தெரியும் என நான் அதட்டியதில் அடங்கிப் போனாள் அன்னம். இதோ ஆறு மாதங்களாய் வீட்டு செலவு போக சேர்த்து வைத்த தொகையுடன் இன்றைக்கு வரும் ஊதியமும் சேர்த்தால் பத்தாயிரம் ஆகப் போகிறது அவன் ஆசைப்படி வாங்கிக் கொள்ளட்டும்.

மகன் வண்டியில் அமர்ந்து ஓட்டி வருவதாய் கற்பனை செய்து பார்த்தான் என்ன ஒரு அழகு.

"யோவ் எந்த உலகத்துல இருக்க நீ " கையெழுத்த போட்டு காச வாங்கீட்டு கிளம்பு என்ற மேனேஜர் முருகேசனின் குரல் என்னை சுய உலகம் கொண்டு வந்தது. அய்யா இந்த மாசம் நான் லீவு போடாம வந்திருக்கேன் என்றேன் தலையை சொறிந்த படி, சரி சரி கேசியர் கிட்ட சொல்லி வாங்கிக்க என்றார். இனி அவரிடம் வேறு போய் நிக்கனுமா? என்று நொந்த படி நகர்ந்தேன் நான்.

கேசியரின் கண்ணாடிக் கதவை மெல்ல தட்டினேன் அவரின் தலை அசைவுக்குப் பின் உள்ளே சென்றேன். விவரம் சொன்னதும் அவர் ஐநூறு ரூபாய் ஒற்றை தாளை கையெழுத்து வாங்கிக் கொண்டு கொடுத்து அனுப்பினார். வழக்கத்தை விட இன்று நான் வேகமாய் நடக்க ஆரம்பித்தேன் கேட்டுக்கு அருகில் இருக்கும் என் மிதிவண்டியை நோக்கி.

என்னை விட வேகமாய் இடித்த படி நகர்ந்த கந்தசாமியை நான் இழுத்துப் பிடித்து நிருத்தினேன். அவனின் விழிகள் கண்ணீர் சுரந்தபடி இருந்தை பார்த்ததும் எனக்கு கவலை தொற்றிக் கொண்டது. என்ன விவரம் என கேட்ட போது நான் அதிர்ந்து போனேன். கந்தசாமி மதனின் அப்பாதான். மதன் வண்டியில் கண்மண் தெரியாமல் ஓட்டியதால் விபத்து ஏற்பட்டு உயிருக்கு ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் சேர்த்திருப்பதாய் அவன் சொன்னபோது என் இதயம் உடைந்து போனது.

கவலைப்படாதே எதுவும் தவறாய் நடந்து விடாது

என தேற்றி என் கையில் இருந்த ஊதியக் கவரை அவன் கையில் திணித்தேன். அவன் நன்றி சொன்னபடி விலகிப் போனான்.

வீட்டுக்கு வந்ததும் நான் அன்னதிடம் என் பிள்ளையை விசாரித்தேன், அவன் வீட்டுக்கு பின்புறம் இருப்பதாய் சொன்னாள். நான் அவன் அருகில் சென்று அமர்ந்தேன். அப்பா வந்துட்டீங்களா சம்பளம் வாங்கியாச்சா என்று கேட்டவனிடம் இல்லை என்றேன்.

சரி எப்ப தருவாங்க அப்பா நான் பைக்கிற்கு விலை விசாரித்து விட்டேன் கலர் கூட செலக்ட் பண்ணி வச்சிருக்கேன். நீங்க பணம் கொடுத்தா போதும் என்றவனிடம். இல்லை கண்ணா என்னிடம் தற்போது அவ்வளவு பணம் கையிருப்பில் இல்லை. நான் கடன் வாங்கத்தரலாம் என நினைத்திருந்தேன் ஆனால் கேட்ட இடத்தில் கடன் கிடைக்கவில்லை அடுத்த மாதம் வாங்கிக் கொள்ளலாம் என சொன்னதும் அவன் முகம் வாடிப் போனது. சரி அப்பா அடுத்த மாதமேனும் கட்டாயம் வாங்கித் தர முயற்சியுங்கள் என சொல்லிவிட்டு செல்லும் மகனிடம் மனதுக்குள் மன்னிப்பு கேட்டேன்.

*உள்ளம் விம்மும்போது..*

*விழிகள் சொல்லும்*

*ஆறுதல் வார்த்தைதான்*

*கண்ணீர்..*

*- ரத்ன தேவி -*

என்னை மன்னித்து விடு மகனே நான் உன்னை மதனை போல் மருத்துவமனையில் பார்க்கும் நிலை வந்தாள் என் உயிர் என்னிடம் இருக்காது. உன் ஆசையை நிறைவேற்ற முடியாத தகப்பனாகிப் போனேன் நான். உன் அத்தனை ஆசைகளையும் நிறைவேற்றி உன்னை அல்பாய்சில் பரிகொடுக்க நான் விரும்பவில்லையடா மகனே. என் கண்களில் வழியும் நீரை துடைத்தபடி நான் நடந்தேன் மதனை பார்க்க மருத்துவமனைக்கு.

பின் குறிப்பு : இக்கதை ஒரு உண்மைச் சம்பவத்தின் பின்னனியில் எழுதப்பட்டது. சாலை விபத்தினால் இறந்து போன மதன் கடைசி பலியாய் இருக்கட்டும். தேவையின்றி வாகனம் வாங்கித் தருவது பிள்ளைகளை சந்தோசப் படுத்துவதுடன் பெற்றவர்களை துக்கத்திலும் ஆழ்த்துகிறது.

# ஹோட்டல் தோசை + தக்காளி சாம்பார்

லதாபாலு

### தேவையான பொருட்கள்

புழுங்கல் அரிசி 2 ஆழாக்கு
உளுந்தம் பருப்பு 1/2 [அரை ஆழாக்கு]
மைதா மாவு 1/2 ஆழாக்கு,
ரவை 1/2 ஆழாக்கு
தோசைக்கு தொட்டுக் கொள்ள தக்காளி சாம்பார் நன்றாக இருக்கும்

### செய்முறை

காலையில் செய்வதானால் முதல் நாள் மாலையில் அரிசியையும், பருப்பையும் தனித்தனியாக ஊற வைத்து தோசைக்கு அரைப்பது போல அரைத உப்பு போட்டு கரைத்து வைத்துக் கொள்ளவும்.

மறு நாள் காலையில் அரைத்த மாவுடன் மைதா மாவையும் ரவையையும் போட்டு நன்கு கலந்து வைத்துக் கொள்ளவும் பின்பு ஒரு மணி நேரம் கழித்து தோசை வார்க்க வேண்டும்.

இனி **தக்காளி சாம்பார்** செய்யும் முறையை பார்ப்போம்.

முதலில் தக்காளிப் பழங்களை ஒரு பாத்திரத்தில் எடுத்து தண்ணீர் ஊற்றி அடுப்பிலேற்றி நன்றாக வேகவைத்து தோலுரித்துக் கொள்ளவும்.

பின்பு சாம்பார் வெங்காயம் ஒரு கைப்பிடி அளவு எடுத்து பொடியாக அரிந்து கொண்டு இரண்டு பச்சை மிளகாய் ஒரு துண்டு இஞ்சி எல்லாவற்றையும் பொடியாக அரிந்து வாணலியில் எண்ணை ஊற்றி கடுகு உளுந்து தாளித்து வெங்காயம் பச்சை மிளகாய் இஞ்சி எல்லாம் சேர்த்து தாளித்து சிறிது நீர் ஊற்றி உப்பு மஞ்சள் தூள் மிளகாய் தூள் போட்டு நன்கு கொதிக்க வைக்கவும்.

வேகவைத்த தக்காளி பழங்களை மிக்ஸியில் அரைத்து சேர்த்து மீண்டும் நன்கு கொதிக்கவைத்து கறிவேப்பிலை , கொத்துமல்லி தழை சேர்த்து இறக்கவும்.

# பில்லா III: பில்லா Vs டிராகுலா

*சிவாஜிதாசன்*

**பகுதி - 9**




**கா**லம் என்றுமே தன் பாதையை மாற்றிக் கொண்டே போகும். விளையாட்டாய் இறங்கிய காரியங்கள் வினையாக முடிந்து விடும் என்ற பழமொழியை மெய்ப்பிப்பது போல, திவாகர் மாஃபியா கூட்டத் தலைவன் ஜோசப்பின் கையாள் பரத்திடம் சிக்கிக்கொண்டு மயக்க நிலையில் கிடந்தான்.

மாலை நேர சூரியன் தன் தங்க நிற ஒளியலைகளை கடலின் மீது வீசியெறிந்து ஜலத்தை ஜொலிக்கச் செய்துகொண்டிருந்தது. கடற் பறவைகள் வானில் 'க்ரீச்..' என்று ஒலியெழுப்பியபடி எங்கோ பறந்தன.

கடலில் ஒரு கப்பல், ஆமை போன்று மெதுவே நகர்ந்தபடி சென்றுகொண்டிருந்தது. அக்கப்பலின் முனையில் ஒரு நீண்ட கம்பியில் திவாகர் கட்டப்பட்டிருந்தான். கம்பி ஒடிந்தாலோ கயிறு அறுந்தாலோ நேரே கடல் அரக்கனின் வாயில் விழுந்து, சுறாக்களுக்கும் திமிங்கலத்துக்கும் இரையாகிவிடுவான் அவன். அக்கப்பலைச் சுற்றி ஆயுதம் ஏந்திய அடியாட்கள் வலம் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் அங்கே நடந்து செல்வது ரோபோக்களை நினைவுபடுத்தின.

திவாகருக்கு லேசான நினைவு துளிர்விடத் தொடங்கியது. 'என்ன நடந்தது' என்று எண்ணக்கூட சக்தியற்றவனாய் வலியோடு முனங்கினான். கம்பியில் தொங்கிக்கொண்டிருந்தது ஊஞ்சல் ஆடுவது போல் தோன்றியது அவனுக்கு. இரண்டு நிமிடங்களில் எல்லா நினைவுகளையும் மீட்டெடுத்து கண்களைத் திறந்து பார்த்தவனுக்குப் பேரதிர்ச்சி. உடல் முழுதும் கிலி பரவி மீண்டுமொரு மயக்க நிலையை அடைந்தான்.

'என்ன இது விபரீதம் !' என்று மனதில் எண்ணியபடி, சீற்றமென எழுந்த கடல் அலைகளும், அங்கொன்றும் இங்கொன்றுமாய் திரியும் சுறாக்களும் அவனைப் பயமுறுத்தி, "ஓஓஓ.." வென அலறச்செய்தது.

"காப்பாற்றுங்கள் ! காப்பாற்றுங்கள் !" என்று அலறினான்.

கப்பலிலிருந்த யாரும் கண்டுகொள்வதாய் இல்லை. சலனமற்ற முகத்தோடு அவனையே வெறித்துக் கொண்டிருந்தனர். கப்பல் ஆட ஆட கம்பி கீழே வளைந்து மேலே எழ எழ மரணத்தை மிக அருகில் கண்டான்.

"யாராவது காப்பாற்றுங்கள் !" என்று கூக்குரலிட்டான்.

அவனது அழுகுரலைச் சகிக்க முடியாதவனாய் தனது வலது காதைக் குடைந்துகொண்டபடி கையில் குளிர்பானத்தோடு பரத் அங்கே வந்தான். துடித்துக்கொண்டிருந்தவனைப் பார்த்து விஷமப் புன்னகை வீசியபடி கடலை நோக்கினான்.

பரத்தைக் கண்டதும் திவாகர் அவனது முகத்தையே உற்றுநோக்கினான். 'இவன் ஜோசப்பின் வலது கரமாச்சே? நிச்சயமாக நமக்கு மரணம் தான். பணத்திற்கு ஆசைப்பட்டு படுபாதாளத்தில் விழுந்துவிட்டேனே!' என்று கலங்கிய எண்ணங்களோடு, சிறிது முயற்சித்துப் பார்க்கலாம் என்ற இறுதி எண்ணத்தோடு பரத்தைப் பார்த்தான்.

"சார், நான் என்ன பண்ணிட்டேனு இப்படி கட்டி வச்சிருக்கீங்க?"

பரத், பதில் கூறாமலும் அவன் கூறியதைக் காதில் போட்டுக்கொள்ளாமலும் குளிர்பானத்தைக் குடித்துக்கொண்டிருந்தான். சிறு மௌனத்திற்குப் பிறகு, திவாகரை நோக்கினான்.

"உங்கிட்ட நான் சில கேள்விகள் கேக்கணும். அதுக்கு உண்மையான பதில் எனக்கு வேணும். விளையாடினாலோ பொய் சொன்னாலோ உன் விதிய யாராலையும் மாத்த முடியாது"

திவாகரின் முகத்தில் மிரட்சி பரவியது.

"எத்தனை நாளா எங்களைப் பின் தொடருற?" என்று முதல் கேள்வியை எறிந்தான் பரத் திவாகரைப் பார்க்காதவாறே.

"சார், எனக்கு ஒன்றும் தெரியாது. நீங்க தப்பா புரிஞ்சி வச்சிருக்கீங்க. என்னை இறக்கி விடுங்க"

பரத் ஒருவனைக் கூரிய விழிகளோடு நோக்கினான். வீசியெறிந்த விழிகளின் உத்தரவைப் புரிந்துகொண்ட இன்னொருவன், திவாகரைப் பிணைத்திருந்த கயிற்றை அறுக்கத் துவங்கினான்.

திவாகர் பயக்கூக்குரலிட்டு, "நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! நான் சொல்லிடுறேன்!" என்றான்.

கயிற்றை அறுக்கத் துவங்கியவனை நோக்கிச் சமிக்ஞை செய்தான் பரத். அவனும் நிறுத்திவிட்டான்.

"சொல்லு. எத்தன நாளா பின்தொடருற?"

"இரண்டு வாரம் சார். ஃபிரான்ஸ் டெய்லி நியூஸ் பத்திரிக்கையின் எடிட்டர் ராம்சரண் தான் பணம் குடுத்து இப்படி செய்யச் சொன்னாரு. இப்போ மட்டும் நீங்க விட்டீங்கனா திரும்ப உங்க பக்கம் தலைய கூட நீட்டமாட்டேன்"

"என்ன என்ன உண்மை சேகரிச்சிருக்க?" என்று கேட்டான் பரத்.
"சார் எல்லாம் என்னுடைய பையில இருக்கு. நீங்களே பாத்துக்கோங்க" என்றான் திவாகர்.

ஒருவன் திவாகரின் பையை எடுத்து வந்து கொடுக்க, அதனைச் சோதனை செய்தான் பரத். அதில் சில போட்டோக்களும் மற்றும் அவனது டிரைவிங் லைசென்ஸ், விசிட்டிங் கார்ட்ஸ் மட்டுமே இருந்தன. சோதித்த பின், பையைத் தனது ஆளை நோக்கி வீசினான். அவனும் சரியாகப் பிடித்துக்கொண்டான்.

"கடைசியா ஒரு கேள்வி" என்றான் பரத்.

"அதுக்கு பதில் சொன்னா விட்ருவீங்களா?" என்று ஆசையோடு கேட்டான் திவாகர்.

ஆமோதிப்பதாய் தலையசைத்து, "பில்லாவிற்கு மட்டும் அதிகமா முக்கியத்துவம் கொடுக்குற. நீ கொடுத்த மூணு செய்தியில பில்லா பேரு தான் இடம் பெற்றிருக்கு, எதனால?"

"அது தான் நேரம். நான் உங்களை கண்காணிக்க வந்தா, அவர் தான் மாட்டுறாரு. நான் என்ன செய்றது? பதில் சொல்லிட்டேன் சார். விட்ருங்க" என்று மன்றாடினான்.

"நீ இன்னும் முழு விவரமும் சொல்லல போலிருக்கே? பில்லாவ போலீஸ் துரத்திட்டு போயிருக்கிறது எல்லாம் போட்டோ பிடிச்சிருக்கியே?" என்று கிடுக்கிப்பிடி போட்டான் பரத்.

"சார் அன்றைக்கு ராத்திரியில இருந்தே பில்லாவ நான் பின்தொடர்ந்தேன். திடீர்னு அவரு எங்கோ கிளம்பிப் போனாரு. ஹார்பர்க்குப் போயிட்டு கடத்தல் பொருள அவரே வண்டில ஏத்தி, விக்டர் இருக்க இடத்துக்குப் போனாரு சார். ஆனா ஒண்ணு, அவரு இதை வேணும்னே பண்ணல. அது மட்டும் தெரியும். பின்னாடி ஏதோ நடந்திருக்கு. அவர் செஞ்சதுக்கெல்லாம் ஒரே ஒருத்தன் தான் காரணமா இருந்திருக்கணும். அது அந்த டிராகுலா தான் சார்"

டிராகுலா என்ற பெயரைக் கேட்டதும், பரத்தின் புருவங்கள் மேலுயர்ந்தன.

"அவன் தான் காரணம்னு எப்படி உறுதியா சொல்ற?"

திவாகர், "நான் விசாரிச்சேன் சார். கொஞ்சம் கீழ இறக்கி விட்டீங்கனா எல்லாத்தையும் சொல்லிடுறேன். முதுகு வேற அரிக்குது சார்" என்றான் கடுப்பாய்.

"கயிறு அறுத்து விடுறேன். கீழ சுத்துற சுறா வந்து சொறிஞ்சி விடும்" என்றான் அடியாள்.

*நீ*
*என்னுடன் இல்லாத*
*பொழுதுகளை எழுத்துக்களாய்*
*மாற்றி வைத்திருக்கிறேன்.....*
*என்றாவது உன்*
*விரல்கள் அந்த*
*எழுத்துக்களைத் தீண்டும்*
*என்ற நம்பிக்கையுடன்.....*
*- சோபியா -*

திவாகர், "சார்ர்ர்ர்.." என்று பரத்தைப் பாவமான முகத்தோடு நோக்கினான்.

பரத்தும் அவனைக் கீழ இறக்குமாறு மற்றவர்களுக்கு சமிக்ஞை கொடுத்தான். திவாகரும் கீழே இறக்கப்பட்டான். கீழே இறங்கியவுடன் தான் திவாகருக்கு நிம்மதிப் பெருமூச்சே வந்தது. பரத்தின் விழிகளைச் சந்தித்த அவனது கண்கள் மேற்கொண்டு சந்திக்க முடியாமல் வேறு பக்கம் சென்றன.

"சொல்லு" என்றான் பரத் கூர்மையோடு.

திவாகர் கூறத் துவங்கினான். "சார், பில்லாவோட நண்பர் சஞ்சய் இறந்து போனது பத்தி விசாரிக்கும் பொழுது, சில உண்மைகள் தெரிஞ்சது. அவருக்கு சரியா ஏழு மணிக்கு ஆபீஸ் மீட்டிங் இருந்திருக்கு. அதுவும் முக்கியமான மீட்டிங். அத விட்டுட்டு அவசர அவசரமா பில்லா வீட்டுக்கு போயிருக்காரு. அன்றைக்கே ஆக்சிடென்ட் ஆகி இறந்திருக்காரு. இதையெல்லாம் சேர்த்துப் பார்க்கும் பொழுது டிராகுலா சஞ்சைய உபயோகப்படுத்தியோ மிரட்டியோ பில்லாவோட கோட்டைக்குள்ளே நுழஞ்சிருக்கான். அதோட வெளிப்பாடு தான் பில்லா விக்டர கொன்னது"

பரத் தீவிர யோசனையில் இறங்கினான். மௌனமாக குறுக்கும் நெடுக்குமாக சிறு நடை போட்டான்.

திவாகர் நிறுத்தாமல் பேசினான். "அது மட்டும் இல்ல சார். டிராகுலாவால மாஃபியா தலைவருக்கு எல்லாம் ஆபத்து வரும்னு நினைக்குறேன்"

"என்ன சொல்ற?" என்றான் அதிர்ச்சியோடு பரத்.

"என்னுடைய கணிப்பு அப்படித்தான் சார் சொல்லுது. என்னை எதுவும் செய்யாம விட்டீங்கனா, என்னால அவனைக் கண்டுபிடிக்க முடியும்"

பரத் அவனை விடலாமா வேண்டாமா என்று இருதலைக்கொள்ளி எறும்பாய்த் தவித்தான். ஆயினும் அவன் சேகரித்த விவரங்கள் அனைத்தும் அவன் ஒரு திறமைசாலியென நிரூபித்தன.

அதனால், மனதில் ஒரு திட்டத்தைத் தீட்டி, அது சரியென்று ஆமோதிப்பதாய் அவனே தலையசைத்து திவாகரை நோக்கினான்.

"சரி, உன்னைக் கொல்லாம விடுறேன். அதுக்கு பரிகாரமா எனக்கு டிராகுலா பத்தி தெரியணும். அவன் எங்க இருக்கான்னு கண்டுபிடிக்கணும். என்னுடைய ஆளுங்க இரண்டு பேரு உன் கூட எப்போவும் இருப்பாங்க. வேலை முடிஞ்சதும் அவங்களே போய்டுவாங்க. நீ எங்கள ஏமாத்த நினைச்சாலோ புத்திசாலித்தனமா சாகசம் செய்ய நினைச்சாலோ அது உனக்கு தான் ஆபத்து"

தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேறு வழியே இல்லாத காரணத்தால் ஒப்புக்கொள்ள வேண்டியதாய்ப் போயிற்று திவாகருக்கு. புத்திசாலித்தனமாக எதை எதையோ பேசி உண்மைக் கதைகளோடு கற்பனை கதைகளையும் இணைத்து ஒரு கதை சொன்னதால் தப்பித்தேன் என்று மனதில் எண்ணிய அவன், 'டிராகுலாவை எப்படி நான் கண்டுபிடிப்பேன்? கடவுளே என்னைக் காப்பாற்று' என்று மனதினுள் வேண்டிக்கொண்டான்.



ஒரு பெரிய கூடம். அதன் நடுவினில் தொங்கிய விளக்கொன்று சிறிய பரப்பளவில் மங்கலான ஒளியைப் பரப்பிக்கொண்டிருந்தது. பில்லாவின் மனதில், டிராகுலா தப்பியது ஒரு புறம் மகிழ்ச்சியும் மறுபுறம் சோதனையும் கலந்திருந்தது. டிராகுலாவின் வரலாறு அவருக்கு மட்டுமே தெரியும் என்பதில் ஐயமில்லை. ஆனால், அதை மீண்டும் நினைத்துப் பார்க்கும் மனநிலையிலும் பில்லா இல்லை. சவரம் செய்யாமல் விட்டதால் சிறு சிறு முடிப்புற்கள் அவரது கன்னங்களில் எட்டிப்பார்த்தன.

கதவு திறக்கப்படும் ஓசை எரிச்சலாகக் கேட்டது. சத்யம் பில்லாவை நோக்கி நடந்து வந்தார்.

"எத்தனை நாளைக்குப்பா இப்படி தலைமறைவா இருக்கப்போற?" என்று நண்பன் என்னும் முறையில் வருத்தம் தோய்ந்த குரலில் வேதனையாகக் கேட்டார் சத்யம்.

அவர் கூற்றுக்கு மறுமொழி கூற பில்லா விரும்பவில்லை. "அலெக்ஸ் வர ஃபிளைட் எப்போ வருது?" என்று கேட்டார்.

அலெக்ஸிற்கு மீண்டுமொரு ஆபத்து நேர்ந்து, தன்னைப் பகடைக்காயாக மாற்ற விரும்பாத பில்லா, அலெக்சை உடனே பிரான்ஸிற்கு வருமாறு கட்டளையைப் பிறப்பித்தார். அலெக்சும் அதற்கு சம்மதித்து, குறுகிய காலத்திற்குள் தனது பிசினசை முடித்துக்கொண்டு பிரான்ஸிற்கு புறப்பட்டுவிட்டான்.

"சரியா ஏழரை மணிக்கு வருதுப்பா" என்றார் சத்யம்.

"நம்ம ஆளுங்கள ஏர்போர்ட்க்கு அனுப்பி வை"

"நீ சொல்றதுக்கு முன்னாடியே அதை செஞ்சிட்டேன்" என்று கூறினார் சத்யம் புன்முறுவலோடு.

பில்லா, "நம்ம ஏரியாவ சரியா கவனிச்சிக்க. விட்டுக்கொடுக்கக்கூடாது. அப்படி விட்டுப்போய்ட்டா அது நல்லா இருக்காது. இத்தன நாளா நான் கட்டிக் காப்பாத்தின கோட்டை அது. நான் சாகுற வரைக்கும் யாருக்காகவும் எதுக்காகவும் விட்டுக்கொடுக்க முடியாது" என்றார் சிறிது சினத்தோடு.

"நீ கவலைப்படாம இருப்பா. நான் எல்லாத்தையும் பார்த்துக்கிறேன். உன் இடத்தில இன்னொருத்தனுக்கு கால் வைக்க தைரியம் இருக்குமா என்ன?" என்று கூறியபடி விடைபெற்றார் சத்யம்.

பில்லா நாற்காலியில் அமர்ந்து, விட்டத்தை வெறித்தார். அவருடைய உள்ளம் ஒன்று மட்டும் சொன்னது. 'நான் தோற்கமாட்டேன். நான் தோற்கமாட்டேன்' என்று கூறிக்கொண்டே இருந்தது. அதற்கு சாட்சியாக அவரது விழிகள் சிவந்த நிறத்தில் காணப்பட்டன. மீண்டும் டிராகுலாவை எதிர்க்க வேண்டுமென்றால், தன் பலவீனத்தை முதலில்

பாதுகாக்கவேண்டும் என்று விரும்பியதன் விளைவு தான் அலெக்ஸ் பிரான்ஸிற்கு வருவது.



அலெக்ஸ் பில்லாவை ஏர்போர்ட்டிலிருந்து அழைத்து வர இரண்டு கார்களில் அனுப்பப்பட்ட ஆட்கள் வழியில் கடும் போக்குவரத்து நெரிசலில் சிக்கிக்கொண்டனர். ஒரு பேருந்தும் காரும் விபத்துக்குள்ளானதால் ஏற்பட்ட நெரிசல் அது. தூரத்திலிருந்து பார்த்தால் வரிசையாகத் தீப்பெட்டிகளை அடுக்கி வைத்தார் போல் கார்கள் நின்றுகொண்டிருந்தன.

நேரம் சரியாக இரவு 7.15. இன்னும் பதினைந்து நிமிடங்களில் விமானம் வந்துவிடும். அலெக்சும் வந்துவிடுவான். சத்யம் அனுப்பிய ஆட்கள், அலெக்சை அழைக்க சரியான நேரத்திற்குள் எப்படி விமான நிலையத்தைச் சென்றடைவது? என்று போராடினர்; டிராபிக்கைக் கண்டு தங்களுக்குள்ளே வெந்துகொண்டிருந்தனர்.

இரவு தோன்றி நட்சத்திரங்களும் நிலவும் வானை அலங்கரித்துக்கொண்டிருந்தன. அலெக்ஸ் பில்லா வந்த விமானம் ஏர்போர்ட்டில் தரையிறங்கியது. ஏர்போர்ட்டின் சுங்கச் சோதனையையும் சம்பிரதாயங்களையும் முடித்துவிட்டு அலெக்ஸ் வெளிவர சரியாக மணி 8.30 ஆனது. கையில் ஒரு பெட்டியும் தோளில் ஒரு பையுமாக வந்த அலெக்சிற்கு தன்னை அழைத்துச் செல்ல ஆட்கள் இன்னும் வரவில்லை என்று தெரிந்ததும் அலுப்பும் வெறுப்பும் லேசாக மனதினுள் முளைத்தன. 'சரி, டாக்ஸி பிடித்து சென்றுவிடலாம்' என்றெண்ணி, பெட்டியைச் சுமந்துகொண்டு நடக்கலானான்.

அப்பொழுது அவன் முன்னே ஒருவன் தோன்றினான். அவனது கைகளில் மூன்று பலூன்கள் காற்றில் அசைந்தாட நூலினைப் பிடித்துக்கொண்டு பலூனால் முகத்தை மறைத்திருந்தான்.

'யாரிவன்?' என்று மனதினுள் எண்ணிய அலெக்ஸ் பில்லாவின் ஆவலை அதிக நேரம் வீணடிக்காமல் பலூன்களை வானில் பறக்கவிட்டு தனது முகத்தைக் காட்டினான் அவன்.

கோமாளி முகமூடியோடும் குறும்புப் பார்வையோடும் சிறு பிள்ளை நடையோடும் டிராகுலா நின்றுகொண்டிருந்தான். அவனது விழிகள் அலெக்சை கூர்மையோடும் அதே சமயம் குறும்போடும் நோக்கின. "நீங்க பில்லா சாரோட மகன் தானே?" என்றான் குதூகலமான குரலில்.

சிரித்த முகத்தோடு, "ஆமாம் " என்றான் அலெக்ஸ்.

"கைகுடுங்க, கைகுடுங்க.." என்று அலெக்சின் அனுமதி இல்லாமலே அவனது வலதுகையைப் பிடித்து வலுக்கட்டாயமாகக் குலுக்கினான். "வாங்க சார். நான் உங்களை கூட்டிட்டுப் போறேன்" என்று அவனது பெட்டியை வாங்கிக்கொண்டு ஓட்டமென ஓடி ஒரு காரின் டிக்கியில் வைத்து மூடினான்.

டிராகுலா செய்யும் சேஷ்டைகளை ரசித்தபடி, அலெக்ஸ் அவனது காரில் ஏறி, பின் சீட்டினில் அமர்ந்தபடி, "அப்பா கிட்ட தான் வேலை செய்றியா நீ?" என்று ட்ராகுலாவைப் பார்த்து கேட்டான்.

"இல்லை சார். என்னை அவரு வேலையிலேயே சேர்த்துக்க மாட்டேங்கறாரு" என்று பரிதாபமாக அலெக்சைப் பார்த்துக் கூறினான் டிராகுலா.

"கவலைப்படாத. நான் அப்பா கிட்ட பேசுறேன்" என்று ஆறுதல் மொழி கூறினான் அலெக்ஸ்.

அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல், "உங்க பக்கத்தில இருக்க கண்ணாடியை மூடிக்கோங்க சார்" என்றான் டிராகுலா.

"எதுக்கு?"

"உங்களைக் கொல்றதுக்கு இங்க சில பேரு சுத்திட்டு இருக்காங்க. பார்த்தாங்கனா உங்களுக்குத் தான் சார் கஷ்டம்"

டிராகுலா விளையாடுகிறான் என்று எண்ணிய அலெக்ஸ், "நான் பாத்துக்குறேன். நீ சீக்கிரம் கிளம்பு" என்றான்.

"அப்புறம் உங்க இஷ்டம் சார்" என்று கூறியபடி காரை முன்னே எடுத்தான் டிராகுலா.

ஏர்போர்ட்டைக் கடந்து பிரான்ஸின் பிரதான சாலையில் சென்றுகொண்டிருந்தது டிராகுலாவின் கார்.

விளக்கொளியில் பிரகாசித்துக்கொண்டிருந்த கடை வீதிகளை ரசித்தபடி இருந்த அலெக்சின் முன் ஒரு துப்பாக்கிக்குண்டு அவனைக் கடந்து சென்றது. 'என்ன நடந்தது?' என்று எண்ணுவதற்குள் டிராகுலாவின் காரைப் பல தோட்டாக்கள் தாக்கிச் சல்லடையென ஆக்கியது. ஆயினும் டிராகுலா பதற்றம் அடையாமல் அலெக்சை நோக்கிச் சிரித்தான். அலெக்ஸ் புரியாமல் அவனைப் பார்த்து விழித்தான்.

"நான் தான் சொன்னேனே சார், உங்களைக் கொல்லப் பாக்குறாங்கன்னு. நீங்க தான் கேக்கல" என்றான் அப்பாவி போன்ற குரலோடு டிராகுலா.

"யார் இவங்க? எதுக்கு என்ன சுடுறாங்க?"
"அது பெரிய கதை சார். நான் உங்களை காப்பாத்துறேன். நீங்க தலைய கீழ குனிஞ்சிக்கோங்க" என்று கூறியபடி காரை வேகமாக ஓட்டினான். வீதிகளின் உள்ளே புயலெனப் புகுந்து பறந்தது கார்.

அலெக்ஸ் ஆச்சர்யத்தில் மூழ்கினான். டிராகுலா கார் ஓட்டிய விதம் அபாரமாய் இருந்தது. அவன் சாதரணமானவன் அல்ல என்பதைப் புரிந்துகொண்டான்.

அப்பொழுது ஒரு வாலிபன் இருசக்கர வாகனத்தில் டிராகுலாவின் காரின் முன் வேகமாக சென்றுகொண்டிருந்தான். டிராகுலாவிற்கு கார் ஓட்டுவது இடைஞ்சலாக இருந்ததால் அவனைக்

காரில் முட்டிக் கீழே தள்ளினான். பிறகு, அலெக்சைப் பார்த்து, "சார் ஒண்ணு தெரிஞ்சிக்கோங்க. நம்ம குறுக்க யார் வந்தாலும் அடிச்சிடணும். இல்லனா தொல்லை" என்று தனது இதழ்களை மடித்து விஷமமாகச் சிரித்தான்.

அவனது நடவடிக்கைகளைப் புரிந்துகொள்ள முடியாத அலெக்ஸ், தப்பித்தால் போதும் என்ற மனநிலைக்கு வந்துவிட்டான்.மீண்டும் காரை குண்டுகள் தாக்கின.

"விடமாட்டாங்க போலிருக்கே"

"எப்படி சார் விடுவாங்க? உங்க அப்பா விக்டர்னு ஒருத்தர கொன்னுட்டாரு. அவரோட தம்பி, அவனோட ஆளுங்கள அனுப்பி உங்களை கொல்லப் பாக்குறான். உயிருக்கு உயிர் தான் விலை போல"

அலெக்சிற்கு, 'இவன் கிறுக்கனா? அல்லது மிகப் பெரிய புத்திசாலியா?' என்று புரியாமல் தத்தளித்தான்.

நீண்ட நேர போராட்டத்திற்குப் பிறகு, பின்தொடர்ந்த கார்களை ஏமாற்றி பில்லாவின் வீட்டுப் பக்கம் காரைக் கொண்டு வந்தான் டிராகுலா. அலெக்சின் உள்ளம் வெறுமையாகவும் அதே சமயம் குழம்பியும் இருந்ததை முகம் காட்டிக்கொடுத்தது.

டிராகுலா, "இன்னைக்கு எனக்கு கொலை பண்ற மூடே இல்ல சார். ஆனாலும் அவங்களா ஏமாத்திட்டு வந்தது நல்லா தான் இருந்துச்சு" என்றான்.

அவன் பேசுவதை அலெக்ஸ் கவனியாமல் அமைதியாக இருந்தான். பில்லாவின் வீட்டின் முன் காரை நிறுத்தினான், டிராகுலா. அலெக்ஸ் இறங்கினான். ஒரு கட்டுப் பணத்தை எடுத்து அவனிடம் நீட்டினான். "உயிரைக் காப்பாற்றியதற்கு நன்றி. இத வச்சி உன் காரை சரி பண்ணிக்கோ" என்றான்.

டிராகுலா குறும்பாக "தேங்க் யூ" என்றான்.

அலெக்ஸ் உள்ளே போனதும், டிராகுலா சிறிது தூரம் டாக்ஸியைச் செலுத்தி ஆள் அரவமற்ற இடத்தில் நிறுத்திவிட்டு, கார் டிக்கியைத் திறந்தான். ஓர் ஆள் கை கால்கள் கட்டப்பட்ட நிலையில், முகம் முழுதும் ரத்த வெள்ளத்தில் கிடந்தான். அவன் தான் உண்மையான டாக்ஸி டிரைவர் என்பதை அவனது ஆடை காட்டிக் கொடுத்தது. அவனிடம் பணத்தை வீசியெறிந்து, "இத வச்சி காரை சரி பண்ணிக்கோ" என்று கூறியபடி துள்ளும் நடையோடு அங்கிருந்து மறைந்தான் டிராகுலா.



அலெக்சைக் கொல்ல வந்தவர்கள் ஏமாந்து, விக்டரின் தம்பி முன் நின்று விஷயத்தைக் கூறினர்.

கொதிப்பான அவன், துப்பாக்கியை எடுத்து வீட்டைச் சுற்றிச் சுட்டு தனது கோபத்தைக் காட்டினான்.

இறுதியாக, தனது அடியாட்களிடம் ஒன்றை மட்டும் கூறினான்.

"அலெக்ஸ் பிணமாகணும்..."

**தொடரும்...**

# என் காதல் கணவா

*கவியாழினி*



*அத்தை மகனே என் மாமனே*
*என் பிள்ளையின் தகப்பனே*

*நீ வேடிக்கை பார்க்கையில்*
*நான் விதையாக இருந்தேன்*

*நீ விளையாடும் பருவத்திலே*

*நான் வேடிக்கைப் பார்த்தேன்*

*நீ விறுவிறுப்பாய் வளர்ந்திடவே*
*நான் விளையாடித் திரிந்தேன்*

*நீ வில்அம்பாய் காதல் பார்வை வீச*
*நான் விறுவிறுப்பாய் வளர்ந்தேன்*

*நீ விசிய காதல்அம்பில் மனைவியாக்க*
*நான் காதல் பார்வையை ரசித்து கரைந்தேன்*

*நீவாழ்வின் விதையை உற்பத்தி செய்ய*
*நான் மனைவியென உன்னுள் மூழ்கிபோனேன்*

*நீ விதைத்த விதை வேரூன்ற பாடுபட*
*நான் விதைக்கு பதியமிட்டு மகிழ்ந்தேன்*

*நீ பாடுபட்ட விதை விருட்சமாக வளர்ந்திட*
*நான் விதைக்கும் உனக்குமாய் வாழ்ந்தேன்*

*நீ விதையுமற்று விருட்சமுமற்று என்னைகாக்க*
*நான் விசும்பல்களாய் உன்னுள் உறங்கிப்போனேன்*

*நீ நான் என்பதெல்லம் நீதானென்று மாற்றம்பெற*
*என்னையே நான் உண்ணுள்கண்டு மடிசாய்ந்தேன்*

*கல்லறையிலும் கைபிடித்தபடி கண்ணுறங்குவேன்*
*நீ என்னுடனிருப்பாய் என் காதல் கணவா*

# சிநேகிதியுடன் தனிமையில் சில நிமிடங்கள்

## 13 – கூச்ச சுபாவம் உள்ளவரா?

பூங்கோதை

வணக்கம் அன்புச் சிநேகித உள்ளங்களே…

இன்று இளைய நண்பர் ஒருவர் புதிய கேள்வியோடு சிநேகிதியை நாடியுள்ளார்.இது பல மாணவ மாணவியருக்கும் பொருத்தமாகவும் உபயோகமாகவும் இருக்கும் என நம்புகிறேன். இன்று

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார்
நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

பிறர்க்கு வரும் பழிக்காகவும், தமக்கு வரும் பழிக்காகவும் நாணுகின்றவர் நாணத்திற்கு உறைவிட மானவர் என்று உலகம் சொல்லும்.

என்ற குறளை மனதில் தரித்துக் கொண்டு, சிநேகிதியோடு சில நிமிடங்கள் பயணிக்கலாம் வாங்க..

சிநேகிதியுடன்…….

வணக்கம் சிநேகிதி,

என் பெயர் கார்த்திக். நான் 10ம் வகுப்பில் கற்றுக் கொண்டிருக்கும் மாணவன்.எனது பிரச்சனை என்னவென்றால் என் கூச்ச சுபாவம் தான். பொதுவாக நான் யாருடனும் பேசுவதில்லை. இதனால் அதிகமாக நண்பர்கள் இல்லை.வகுப்பறையில் ஆசிரியர் எதையாவது வாசிக்கச் சொன்னாலோ அல்லது கேள்வி கேட்டாலோ என் நாக்கு புரள மறுக்கிறது. வார்த்தைகள் சிக்கி விடுகின்றன. என்னுடைய கூச்சத்தால் பொது இடங்களிலும் எனக்கு பெரும் அசௌகரியமாக இருக்கிறது. தனிமையிலேயே அதிகமாக இருக்கிறேன். இந்த நிலையில் இருந்து வெளிவர உங்கள் ஆலோசனையை எதிர்பார்க்கிறேன்.

தனிமையில் சில நிமிடங்கள்….

வணக்கம் கார்த்திக்,

நிச்சயம் உங்களுடைய இந்தக் கேள்வி உங்களுக்கு மட்டுமன்றி பலருக்கும் உபயோகமாக இருக்கும் என்று நம்புகிறேன்.

கூச்சம் அல்லது வெட்கம் என்பது பொதுவாக எல்லோருக்கும் இருக்கக்கூடியதே. ஆனால், சமூகத்தில் அகமுக நோக்காளர்கள்(introverts) மட்டுமே கூச்சசுபாவமுடையவர்கள் என்று எண்ணப்படுகின்றனர். ஆனால், அது முற்றிலும் தவறான கருத்து.எல்லோரிடமும் இருக்கும் கூச்சம் சந்தர்ப்பங்களிலும் விகிதாசாரத்திலும் ஆளுக்காள் வேறுபடுகின்றது என்பதே உண்மை. சொல்லப் போனால்,எனக்குள் கூட அதிகப்படியான கூச்சம் இருக்கிறது. பலர் முன்னிலையில்ல் எழுந்து நின்று ஒரு சிறு கேள்வி கேட்பதற்கு முன்னர் என் இதயம் அடித்துக் கொள்ளும் வேகம் எனக்கு மட்டுமே புரியும். ஆனால், என்னுடன் பழகுபவர்கள் இதை நம்பவோ ஏற்கவோ மாட்டார்கள். என்னைப் போன்றவர்கள் வெளிப்படுத்திக் கொள்வதில்லை. நீங்கள் வெளிப்படுத்தி விடுகிறீர்கள். அவ்வளவு தான் வித்தியாசம். எனவே இது உங்களுக்குள் இருக்கும் மிகப்பெரிய பின்னடைவாக நீங்கள் நினைக்க வேண்டியதில்லை.அத்துடன் இதிலிருந்து நீங்கள் வெளியில் வருவதும் இதனால் ஏற்படும் அமைதியான சுபாவத்தை நீங்கள் நல்லவழியில் பயன்படுத்தவும் வழிகள் உண்டு. அவை பற்றித் தொடர்ந்து நோக்கலாம்.

இதற்கு 3 பிரதான காரணங்களை உளவியலாளர்கள் சொல்கிறார்கள்.

1. அளவுக்கதிகமான தன்னுணர்வு (Excessive Self-Consciousness ) – சமூக சூழ்நிலைகளில் உங்களைப்பற்றி அளவுக்கு மீறிக் கவலைப்படுதல்
2. அளவுக்கதிகமான எதிர்மறையான சுய மதிப்பீடு (Excessive Negative Self-Evaluation ) - உங்களைப் பற்றிய தாழ்வான கருத்து
3. அளவுக்கதிகமான எதிர்மறையான சுய முன்னீடுபாடு (Excessive Negative Self-Preoccupation )– பலர் முன்னிலையில் நீங்கள் செய்யக்கூடிய தவறுகளைப் பற்றி முன்கூட்டியே அளவுக்கு மீறி கவலைப்படுதல்

கார்த்திக், மேற்குறிப்பிட்டவற்றில் ஏதோ ஒன்றில் நீங்கள் அடங்குவதை இனங்காண முடிகிறதா?

கூச்ச சுபாவம் என்று பொதுமைப்படுத்தாமல், உங்கள் பிரச்சனை என்ன என்பதை நீங்கள் இனங்காண முன்வர வேண்டும்.

தன்னுணர்வு அதிகமாக இருப்பதை உணர்ந்தால் அதை உங்களைப் பற்றிய விழிப்புணர்வாக மாற்றிக் கொள்ளலாம். தன்னைப் பற்றிய சரியான புரிதலே வாழ்க்கையின் பெரும் மாற்றங்களுக்கு முதல்படி.நீங்கள் எந்த எந்த சந்தர்ப்பங்களில் கூச்சமடைகிறீர்கள் என்பதை அவதானியுங்கள்.

அவற்றை ஒரு குறிப்புப் புத்தகத்தில் குறித்துக் கொள்ளுங்கள். இது நீங்கள் அந்த சூழ்நிலைகளைப் புரிந்து கொள்ள அவசியமானது. உதாரணமாக, நீங்கள் மற்றவர்கள் முன்னிலையில் பேசுவதற்குக் கூச்சப்படுகிறீர்கள் என்பது தான் உங்களுக்கு உங்களைப்பற்றிய கணிப்பு. ஆனால் சற்று சிந்தித்துப் பாருங்கள்.உங்கள் குடும்பத்தினர் மத்தியில் நீங்கள் அப்படி உணர்ந்ததில்லை அல்லவா? அல்லது ஒரு நெருங்கிய நண்பன் முன்னிலையில் நீங்கள் அப்படி உணர்ந்ததில்லை அல்லவா? அப்படியானால், அதற்கு நீங்கள் காரணம் அல்ல. சூழ்நிலையே காரணம். எனவே அதை அறிந்து கொண்டால் நீங்கள் அந்தச் சூழ்நிலைக்கேற்றவாறு உங்களைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும்.

உங்களிடம் இருக்கும் பலமான விடயத்தை இனங்காணுங்கள். நீங்கள் உங்களைப்பற்றிய எதிர்மறையான விடயங்களைப் பற்றி எண்ணுவதை விட்டு, சாதகமான விடயங்கள் எவை என்பதைப்பற்றி அவதானிக்க ஆரம்பியுங்கள். உதாரணமாக, பலர் கூடியிருக்கும் ஒரு இடத்தில் நீங்கள் அமைதியை விரும்புபவராக இருந்தால், அதை உங்கள் கூச்ச சுபாவத்தால் தான் என்றோ அல்லது பலவீனம் என்றோ எண்ண ஆரம்பிக்காதீர்கள். எல்லோரும் கலகலப்பானவர்களாக இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. அதை உங்கள் சாதகமான விடயமாக, அல்லது பலமாக எடுத்துக் கொண்டு உங்களைப் பற்றி ஆய்வு செய்யுங்கள். நீங்கள் அமைதியான சுபாவம் உள்ளவராக இருந்தால் அநேகமாக உங்களிடம் செவிமடுக்கும் திறன் (Listening Skill), அல்லது அவதானிக்கும் திறன் (Observation skill)அதிகமாக இருக்கலாம். அத்தகைய திறன் உங்களுக்கு மட்டுமன்றி சமூகத்துக்கும் பயனுள்ளதாக அமையும். உங்களுக்கு இத்திறன்கள் அதிகமுள்ளதை பரிசீலிக்க, ஏதாவது ஒரு வைபவ விழாவில் நீங்கள் அமைதியாக இருக்கும் போது ஒவ்வொருவராக அவதானியுங்கள்.அப்பொழுது ஏதோ ஒரு பிரச்சனையோடு ஒருவர் உங்களுடன் பேச ஆரம்பிக்கலாம். அப்பொழுது அவருடைய பிரச்சனையை செவிமடுக்க ஆரம்பியுங்கள். அந்த நபர் உங்களிடம் பல விடயங்களை வெளிப்படையாகப் பேச ஆரம்பிக்கிறார்கள் என்றால் நீங்கள் நல்ல செவிமடுக்கும் திறன் உள்ளவர் என்று புரிந்து கொள்ளுங்கள். அதற்கான மேலதிக தகுதிகளை வளர்த்துக் கொள்ளுங்கள். நாளடைவில் உங்களிடம் உங்களைப் பற்றி இருக்கக் கூடிய தன்மதிப்பு உயர்ந்திருப்பதைக் காண்பீர்கள்.

உங்கள் வகுப்பறையில் 30 மாணவர்கள் இருக்கிறார்கள் எனின், நீங்கள் எழுந்து நின்று வாசிக்கும் போது அல்லது கேள்விக்குப் பதில் கொடுக்கும் போது மற்றவர்கள் உங்களைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணுவதை தவிர்த்து விடுங்கள். அவர்களில் பலர் அடுத்து தாம் வாசிக்க வேண்டும் என்ற பதட்டத்திலோ அல்லது அடுத்த கேள்விக்கு தாம் பதில் சொல்ல வேண்டுமென்ற பதட்டத்திலோ இருப்பர். அதுபோல் தான் பொது இடங்களிலிலும். ஒவ்வொருவருக்கும் தமது பிரச்சனைகளைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கவே நேரம் போதாது.அப்படி இருப்பவர்களை உங்கள் பதட்டமான செயற்பாடுகளால் தான் நீங்கள் அவர்களை உங்கள் பக்கம் ஈர்க்கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். எனவே உங்கள் பதட்டத்தைப் போக்குவதற்கான வழிமுறைகளைக் கையாளுங்கள். (கீழே கொடுக்கப்படும் வழிமுறைகளை முயன்று பாருங்கள்.

உங்களை நீங்கள் அன்பு செய்ய, பாராட்டக் கற்றுக் கொள்ளுங்கள்.நீங்கள் செய்யும் ஒவ்வொரு விடயத்தையும் உங்களுக்குள் நீங்களே மெச்சிக் கொள்ளும் பழக்கத்தைக் கொண்டு வாருங்கள்.பௌங்களுக்கு நீங்களே ஒரு பாராட்டுக் கடிதமோ அல்லது ஒரு காதல் கடிதமோ கூட எழுதிப்பாருங்கள். நீங்கள் சந்தோசப்படும் காரியங்களில் நீங்களாகவே அடிக்கடி ஈடுபடுங்கள்.

*(விரைவில் படத்தில்)*

*போதுமே இது போதுமே*
*உன் விழிப் பார்த்த அந்த ஒரு நொடி....*

*வேண்டுமே அது வேண்டுமே ..*
*உன் குரல் கேட்க்கும் அந்த மறு நொடி...*

*நீ இமை அசைக்கும் அசைவிலே ..*
*கசந்த இதயம் அசைத்து மலர்த்ததே..*

*உன் விரல் பேசும் அழகிலே..*
*என் இதயம் இடம் மாறி நகர்ந்ததே..*

*போதுமே இது போதுமே... (2)*

*கனவினில் நான் தூங்கையில் ..*
*உன் நினைவாக தான் இருக்கிறேன்..*

*நிஜத்திலும் நான் இருக்கையில்*
*உன் நினைவாகவே தவிக்கிறேன்....*
*போதுமே இது போதுமே ....(2)*

*தமிழரசி*

உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள். நான் முன்பே குறிப்பிட்டது போல எல்லோரும் கலகலப்பாக பேசுபவர்களாகவோ, சத்தமாக சிரிப்பவர்களாகவோ இருக்கவேண்டும் என்பதில்லை. எனவே நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அதை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள்.மாற்ற வேண்டும் என்று நீங்கள் நினைப்பதை மாற்றிக் கொள்ள வேண்டிய

முயற்சிகளை செய்யுங்கள். மற்றப்படி அதைக் குறித்து உங்களை நீங்களே குற்றஞ்சாட்டிக் கொள்ளாதீர்கள்.

பலர் மத்தியில் இருக்கும் போது உங்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்காமல், உங்களைச் சுற்றி உள்ளவர்கள் மீது உங்கள் கவனத்தைக் குவியுங்கள். அவர்களது நடை, உடை, பாவனைகள்,நடத்தைகள் என்பற்றை அவதானித்துக் கொண்டிருங்கள்.மற்றவர்களைக் கற்றுக் கொள்வதில் ஆர்வம் செலுத்துங்கள். ஒருவருடன் பேசும் போது அவரைப் பற்றிப் பேசச் சொல்லுங்கள். இத்தகைய செயற்பாடு உங்களைப்பற்றிக் கவலைப்படுவதைக் குறைப்பதுடன்,அதனால் ஏற்படக்கூடிய பதட்டத்தைத் தவிர்க்கும்.

*(விரைவில் படத்தில்)*

*காணாத கணக்கத்தை மீனப் போல*
*உன்னை காணாமல் கண்டேன் அடி*
*தானே நானே...!!!!!*

*பூவோடு சேர்த்து இருங்கும் நாரைப் போல*
*அடி உன்னோடு*
*சேரத்தானே ஆசை மானே ..!!!*

*உன்னோடு வாழும் உன் நிழல்ப் போல*
*என்னோடு நீ வாழ*
*நான் ஆசைப்பட்டேன் ..!!!*

*காற்றோடு வீசும் தென்றல்ப் போல*
*உன் மூச்சோடு வாழ*
*நான் ஏக்கம் கொண்டேன் ..!!!!!*

*இருள்ளான என் வாழ்வில் ஒளியாக நீயும்*
*விள்க்கேற்றத் தானே*
*உன்னை சுற்றி வந்தேன்..!!!!!*

*நான் வாழ்த்தாலும் வாழ என்*
*வாழ்க்கையே நீதானு*
*முற்றுப்புள்ளிப் போல ஒரு முடிவுக்கு*
*வந்தேன்..!!!!!*

*தமிழரசி*

அடுத்து உங்கள் பதட்டத்தைத் தவிர்க்க நீங்கள் மூச்சுப் பயிற்சி செய்யுங்கள். மூச்சை ஆழமாக உள்ளே இழுத்து, மெதுவாக வெளிவிடுங்கள். இதையே யோகாசன முறைப்படியும் செய்யலாம்.அதாவது மூச்சை உள்ளிழுக்கும் போது எண்ணிக்கை முறையில் உள்ளிழுத்து, அதே எண்ணிக்கையில் வெளிவிடலாம். உதாரணமாக 1 இலிருந்து 4 வரை எண்ணிக் கொண்டே உள்ளிழுத்தால், அதே எண்ணிக்கையில் வெளியில் விடலாம். இதை தொடர்ச்சியாக பல முறை செய்து விட்டு ஓய்வெடுக்கலாம். தனிமையில் இருக்கும் போதும், தனி அறைகளிலும் இதை தினமும் பயிற்சி செய்தால், பதட்டம் நீங்கும் எனக் கூறப்படுகிறது.

உங்களைப்பற்றிய உங்கள் எண்ணங்கள், அபிலாசைகளைக் காட்சிப்படுத்துங்கள். நீங்கள் கூச்சப்படும், அல்லது பதட்டப்படும் ஒரு சூழ்நிலையைக் கற்பனை செய்யுங்கள். அந்த இடத்தில் நீங்கள் ஒரு தன்னம்பிக்கையோடும் மகிழ்ச்சியோடும் இருப்பவராகக் கற்பனை செய்து அந்தக் காட்சியை உங்கள் மூடிய கண்களுக்குள் கொண்டு வாருங்கள்.இதை செய்யும் போது வசதியாக சாய்ந்து அமர்ந்தவாறு கண்களை மூடிக் கொண்டு அந்தக் காட்சியைக் காணுங்கள். அந்தக் காட்சியின் போது நீங்கள் அடையும் உணர்வுகள், காட்சிக்கேற்ற ஒலிகள், நறுமணம்,உங்கள் நகர்வு என எல்லா வகையான உணர்வுகளையும் கற்பனையில் கொண்டு வந்து, அந்தக் காட்சியை உண்மையான காட்சியாக உணருங்கள். இதையும் அடிக்கடி செய்யுங்கள். இது கொஞ்சம் முட்டாள் தனம் போலத்தோன்றினாலும் இது ஒரு மிகவும் வலிமையான பயிற்சி.மனதின் எண்ணங்களே எம்மை வலுப்படுத்துகின்றன.

மேற்கூறிய பயிற்சி போலவே இதுவும், உங்களுக்குள் நீங்களே தட்டிக் கொடுத்துப் பேசிக் கொள்வது. அல்லது ஒரு கூச்சமான, மற்றும் பதட்டமான மன நிலையை மறுத்து அதற்கு எதிரான வார்த்தையைத் திரும்பத் திரும்பக் கூறுதல். உதாரணமாக, நாளைக் காலையில் பாடசாலைக்குச் செல்லும் போது “இன்றைக்கு நான் யாருக்கும் பயப்படப்போவதில்லை. யார் என்னைப் பார்த்து சிரித்தாலும் கவலைப்படப்போவதில்லை. நான் கற்பதற்காகவே செல்கிறேன்.அதனால் பிழை விட்டு படிப்பதில் எனக்கு எந்த சங்கடமும் இல்லை”போன்ற வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டே இருங்கள். இப்படிச் சொல்வதன் மூலம் உங்கள் ஆழ்மனதை மாற்றிவிட முடியும் என ஆய்வாளர்கள் சொல்கிறார்கள். முரண்டுபிடிக்கும் உங்கள் மனத்தையே நீங்கள் ஏமாற்றிவிடலாம். எனவே இந்தப் பயிற்சியை எல்லா சூழலுக்கும் ஏற்ப நீங்கள் பயிற்சி செய்யலாம்.

அசௌகரியமான சூழ்நிலையில் நீங்கள் மாட்டிக் கொள்ளும் போது அந்த இடத்தை விட்டு வெளியே போய்விடத் தோன்றும். ஆனால்,போகாதீர்கள். சூழ்நிலையை எதிர்கொள்ளுங்கள். அப்பொழுது தான் அந்தச் சூழ்நிலைகளை நீங்கள் பழக்கப் படுத்திக் கொள்ள முடியும்.இத்தகைய சூழ்நிலையை உங்கள் ஆராய்ச்சிக்கேற்ற இடமாக மாற்றிவிடுங்கள்.

உங்களை நீங்கள் நிதானித்து ஆராயுங்கள்.இப்பொழுது எனக்கு இந்த சூழ்நிலை ஏன் அசௌகரியமாக இருக்கிறது?

எது என்னை வெளியே போகச் சொல்கிறது? நான் ஏன் வெளியே செல்ல வேண்டும்? என உங்களுக்குள் ஆராய்ந்து கொள்ளுங்கள்.

இதனால்,உங்களை ஆராய்வது மட்டுமன்றி சூழ்நிலை அவதானியாகவும் செயற்படுகிறீர்கள்.

மறுப்புக்களை ஏற்றுக் கொள்ளுங்கள். ஒரு கற்றலின் போது தவறுகள் ஏற்படுவது இயல்பு. எனவே சுட்டிக் காட்ட பட்ட தவறு தனிப்பட்ட உங்களைத் தாக்குவதற்காக அல்ல. மறுப்புக்கள் வருவது வாழ்க்கையில்/கல்வியில் ஒரு பகுதி என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். இத்தகைய சூழ்நிலையில் உங்களுக்கு சுயபச்சாத்தாபம்(சுயபரிதாபம்) ஏற்பட்டால் அதனை உடனேயே இனம்கண்டுகொண்டு அதனை நீக்கி விடுங்கள்.சுயபரிதாபம் உடையவர்கள் வாழ்க்கையில் முன்னேற முடியாது.

எப்போதும் நாம் எம்மை மற்றவர்களோடு ஒப்பிட்டு நோக்கக் கூடாது.நாம் இயல்பாக காரணமேயின்றி பிரபலமானவர்களை எம்முடன் ஒப்பிட்டு நோக்குவதுண்டு. ஆனால் நாம் அவர்களைப்போல் இருக்க முடியாது. நமக்கென்று ஒரு தனித்துவம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். தனித்தனி அச்சுக்களில் வார்க்கப்பட்ட பொம்மைகளைப் பாருங்கள். ஒரு பொம்மைக்குரிய அச்சில் வேறு அச்சில் வார்க்கப்பட்ட பொம்மையைப் பொருத்த முடியாது.அப்படித்தான் நாமும். எனக்கு உங்ளைப்போல் பேசத் தெரியாது,எனக்கு அவனைப்போல் பாட வராது, எனக்கு அவர்களைப்போல் சிரிக்கத் தெரியாது என்றெல்லாம் மற்றவர்களோடு ஒப்பிடுவதை விடுத்து,நான் மற்றவர்களை விட வித்தியாசமானவன். என்னிடம் இருக்கும் பல விடயங்கள் மற்றவர்களிடம் இல்லை. அதனால் நான் தனித்துவமானவன் என்ற எண்ணத்தை உருவாக்கிக் கொள்ளுங்கள். இந்த எண்ணம் வலுப்படும் போது நீங்கள் மற்றவர்கள் முன்னிலையில் அடையும் கூச்சமும் பதட்டமும் இல்லாமல் போயிருக்கும்.

இதுவும் மேலே குறிப்பிட்டது போல் தான். உங்களை நீங்களே எதிர்மறையாக முத்திரை குத்திக் கொள்ளாதீர்கள். நான் கூச்ச சுபாவமுடையவன், எனக்குப் பயம், நான் பேச மாட்டேன், நான் சிரிக்க மாட்டேன், நான் எழுத மாட்டேன் என்று நீங்களே உங்களைச் சொல்லிக் கொள்வதால் அது ஆழ்மனதில் பதிந்து விடுகிறது. நீங்கள் நீங்கள் தான். ‘உங்களுக்கென்று சில இயல்புகள் உண்டு’ என்ற சிந்தனையோடு நிறுத்திவிடலாம் அல்லவா? மேலதிக சிந்தனை எல்லாம் எதற்கு?

பதட்டம் ஏற்படும் சூழ்நிலைகளில் உங்களுக்குள் மந்திரம் போல மூன்று கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருங்கள். இப்படிக் கேட்டுக் கொண்டிருப்பது, அந்த சூழ்நிலையில் இருந்து உங்கள் கவனத்தை திசை திருப்பும்.

நான் சீராக மூச்சு விடுகிறேனா?
நான் இயல்பாக இருக்கிறேனா?
இன்னமும் இயல்பாகச் செயற்படுகிறேனா?

நம்மால் முடியாது அல்லது தோல்வியடைந்து விடுவோம் என நினைக்கும் விடயங்களில் தலையிடுங்கள். இது உங்கள் கூச்சத்தை அல்லது பயத்தை நீங்கள் போக்க உதவும். இந்தக் காரியத்தில் நீங்கள் வெற்றியடையா விட்டாலும், நீங்கள் நினைத்த அளவுக்கு அது ஒன்றும் பூதாகாரமான பிரச்சனை இல்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.ஒருவேளை முதலில் உங்கள் ஈகோ இதற்கு இடம் கொடுக்காது.ஆனால் பின்னர் அதை வெகு விரைவிலேயே விளையாட்டாய் எடுத்துக் கொண்டு சந்தோசமாய் இருக்க முடியும்.

எந்த நேரமும் நல்ல இருக்கை நிலையைத் தெரிவு செய்யுங்கள். பலர் இருக்கும் இடத்தில் நிமிர்ந்து இருத்தல், கைகளை விரித்து வைத்திருத்தல் போன்ற இருக்கை நிலைகளைத் தெரிந்து கொள்ளுங்கள். நிற்கும்போதும் வளைந்து நிற்காமல் நிமிர்ந்து நில்லுங்கள். யாருடனாவது பேசும் போது கையில் எதையும் வைத்து நோண்டிக் கொண்டிருக்காதீர்கள்.

கூச்ச சுபாவம் என்று முத்திரை குத்தப்பட்ட நிலையில் இருந்து நீங்கள் வெளியில் வரும்போது பல வெற்றிகளை அடைந்திருப்பீர்கள். நீங்கள் எங்கெல்லாம் வெற்றியடைந்தீர்கள் என்பதைக் குறிப்பெடுத்துக் கொள்ளுங்கள்.வெற்றிகளை மீண்டும் படிக்கும் பொழுது உங்கள் தன்னம்பிக்கை வளர்வது மட்டுமன்றி, உங்களுக்கு பயன் கிடைக்கக் கூடிய விடயங்களை நோக்கி உங்கள் கவனத்தை நகர்த்தும்

ஸ்ஸப்பா… எனக்கே முடியல… இவ்வளவு விசயம் செய்யணுமா… ஆனால் இவ்வளவையும் செய்தால் உங்களைப் போல ஒரு தன்னம்பிக்கையாளனை எங்கும் பார்க்க முடியாது.

நல்லது நட்பு நெஞ்சங்களே…

உங்கள் பன்முகக் கேள்விகளையும் எதிர்பார்க்கிறேன். கேள்விகளை poongothaichelvan8@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.



சுதா

© Sundar Narayanan

கும்மியடி பெண்ணே கும்மியடி
தமிழிலோர் பாட்டு பாடி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

சித்திரையும் பொறந்ததடி
சின்ன புள்ள உச்சியில
ஆங்கில உஷ்ணமும் ஏறுதடி
தணிக்க தமிழிலோர் பாட்டெழுதி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

வைகாசில வைபோகமும் காணலடி
விலைவாசியும் ஏறுதடி
விளைநிலத்தை வீடாக்காம
விவசாயத்தை வளர்ப்போமென
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

ஆனியில ஊத காத்தும் வீசலடி
உச்சி வெயிலும் தணியலடி
ஊரோரம்
மரமொன்ன நடுவோமென
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

ஆடிப்பட்டம் வந்ததடி
அரசியல் வெள்ளமும் ஓடுதடி
அதிலே
நல்லதொரு ஆட்சியை விதைப்போமென்று
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

ஆவணியில புது நாத்தும் சாகுதடி
பூமியெல்லாம் மாசுதானடி
மண்ணை பொன்னாக்க
மாசெல்லாம் நீக்குவோமென
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

புரட்டாசி விரதமெல்லாம்
துரிதமாக முடியுதடி துரித உணவிலே
அகமும் புறமும் அழகாக
மாதமொரு விரதமெடுப்போமென
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

ஐப்பசி அடைமழையும் பொழியலடி
பொழிந்ததெல்லாம் போகுதடி வீணாக
சேகரிக்க குளமொன்னு வெட்டி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

இல்லத்தில் இன்பம் பொங்கிட
கார்த்திகையில்
வீடெங்கும் விளக்கேற்றி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

மங்கையரே மார்கழியில
மணி எட்டு வரை தூங்காதிங்க
அதிகாலையிலே துகிலெழுந்து
அழகு கோலமொன்னு போட்டு
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

தை பிறந்தும்
தமிழினத்துக்கு வழி பிறக்கலடி
போராட
தமிழர்களை ஒன்று திரட்டி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

மாசியில் மாலையிட்டு
மறுநாளே விவாகரத்து கேக்காதிங்க
அன்போடு பேசி
ஆனந்தமாக வாழ்வோமென்று
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

பங்குனியில்
பழந் தமிழ் பண்பாட்டிலே
ஊரெங்கும் விழாவெடுத்து
தெருவெங்கும் தேரோட்டி

கும்மியடி பெண்ணே கும்மியடி
தமிழிலோர் பாட்டு பாடி
கும்மியடி பெண்ணே கும்மியடி !!!

# இறைவா

கனகீஸ்



என் இதய வலிகளை வார்த்தைகளாக்கி
எழுத நினைக்கிறேன் கவிதையாக...
அவை கண்ணீர் வரிகளாய் காட்சி அளிக்கிறதே
என நீ காணாமல் இருந்துவிடாதே இறைவா...

☆

நான் பிறந்த இடம் விட்டு பிடிங்கி
நட்ட போது வாடித் தான் போனேன்....
ஆயினும் என் வாட்டம் போக்கிய என் வீட்டு
படிக்கட்டுடன் எனக்கு உறவில்லையாமே...

☆

நான் சாய்ந்து நின்று கதை பேசிய தூணுக்கும்
நான் வண்ணமிட்டு அழகுபடுத்தி பார்த்தேனே
அதன் வண்ணம் காயும் முன் யாருக்கோ
சொந்தமாகிப் போய்விட்டதென்ன நியாயம்?...

☆

என் அம்மாவின் புகைப்படமும் கழட்டி
வீசப்பட்ட போது நான் கதறித் துடித்தேனே
அப்போதும் நீ கல்லாய் நின்று வேடிக்கை
பார்த்த தென்ன கருணையே இல்லாமல்...?

☆

என் அழுகுரல் மொத்தமாய் சேர்த்து
வைத்திருக்கும் என் அறைக்கும்
எனக்குமான பந்தம் இனி அறுக்கப்படப் போகிறதே
சுவற்றில் நீ தொங்கியென்ன சாதித்தாய்?

☆

"யாமிருக்க பயமேன்" என நீ சிரித்தபடி
இருப்பதனால் நான் அழும் குரல் உன்
செவிகளில் எட்டாமலே போனதுவோ?...
ஏனிந்த சோதனை என்னிடம் உனக்கு?

☆

காக்கை குருவிக்கும் வசிக்க இருக்குதே
ஒரு கூடு _எனக்கு மட்டும் இனி இருக்க
போவதில்லையோ என் வீடு ? உன்னுடன்
நான் வந்திடுவேனோ தெருவோடு?

☆

வெறும் கல்லாகி நீ இருப்பதினால் தான்
நீ கடவுளாக மாறிப் போனாயோ?
நானும் கல்லாகிப் போவேன் போலும்
உன் கருணையில்லா இச்செயலால்...

☆

நான் நட்ட செடி பூக்கிறாதே அம்மா
அதை நாம் கொண்டு செல்ல முடியாதா?
என கேட்கும், என் மகளுக்கு என்ன பதில்
நான் சொல்வேன் என் இறைவா....

☆

என் மகன் மூன்று வயதில் கிறுக்கிய கிறுக்கலை
ஓவியமாய் சேர்த்து வைத்தேனே சுவற்றில்
அதை நான் இனி எப்படி எடுத்து செல்வேனோ
சொல் இறைவா என்னுடன்?

☆

நான் இன்னும் எத்தனை இன்னல்களை
கடப்பதென உன் சித்தம்? நான்
நீந்தக் கற்கவில்லை என தெரிந்தும் நீ
தண்ணீரில் தள்ளிவிட்டு பார்ப்பதுவோ உன் திட்டம்?

☆

வாசனை தரும் மலர்கள் சூடி மகிழ்ந்ததில்லை
பாசங்கள் தந்து நான் பூத்திடும் மலரானேன்
வாடி போவேன் என தெரிந்தும் என்னை
வாசலில் நிறுத்துவதோ தர்மம்..?

☆

என் வார்த்தைக்கு மட்டுமில்லை என்
வாழ்க்கைக்கும் நீ தான் பொறுப்பேற்கிறாய்
படைத்தவன் நீ இருக்கையிலே என் மேல்
பகை வளர்ப்பவர்க்காய் நான் பயந்திடபோவதில்லை...

☆

துணிந்தே இறங்குகிறேன் வாழ்க்கை என்னும்
ஆழ்கடலில் துடுப்பாய் நீ இருப்பாய் என
நம்பி நான் படகில், கரை சேர்ப்பதும்
கல்லறை சேர்ப்பதும் இனி உன் கரங்களில் தான்
இறைவா....

☆

# என் மழைத் தோழியுடன்!

சுதா



நேற்று
ஊரெங்கும் கதவடைப்பு
தென்றலது ஜன்னலை தட்டிட
எட்டி பார்த்தேன் ..!!!

☆

என் தோழியவள்
விண்ணுலக தேவதை
மண்ணுலகம் வந்திருந்தாள்..!!!

☆

மகிழ்ச்சியில் மயிலாகி
தோகை விரித்து ஆடினேன்
ஆனந்தத்தில்
அகவை குறைந்தது கணிசமாக
பத்து வயது
பட்டாம் பூச்சியானேன்..!!!

☆

சிறகடித்து
கட்டியணைத்தேன் நெஞ்சோடு
அள்ளி முத்தமிட்டேன்
அவளின் கோள உடலெங்கும்..!!!

☆

தொட்டால் சிதைந்து போகும்
பளிங்கும் மேனி பாவையவள்
பிரம்மன் படைக்காத அதிசயமே..!!!

☆

வானுக்கும் பூமிக்கும்
நீர் பாலமமைத்து
நிலமகளை நீராட்ட வந்த
திரவ தேக முத்தவள்..!!!

☆

பயண களைப்பிலே
படுத்துறங்கினாள்
பூமகளின் மடியிலே..!!!
நொடியில் துயில் கலைத்து
புறப்பட்டாள்
கொஞ்சம் ஓய்வெடு என்றேன்..!!!

ஓய்வா ..?? எனக்கா..??

☆

நான்
வீட்டிலே அடைந்து கிடக்க
பூலோக கன்னியுமல்ல
படிக்கையிலே படுத்து கிடக்க
பொறுப்பில்லா பாலகனுமல்ல

படி தாண்டி வா என்னோடு
கடமைகள்
மலையாய் குவிந்துள்ளதென்று
கனத்த குரலில்
கன்னத்தில் அறைந்தாள் ..!!!

புறப்பட்டேன் அவளோடு..

☆

வழியில் நின்ற தடைகளை
உளியின்றி உடைத்து
தன்னோடு கட்டியிழுத்து
சீறிப் பாய்ந்தோடினாள்..!!!

☆

மனித கிருமிகளால்
தாவரங்களுக்கு இரத்தசோகை
வேர்களில் ரத்தமாய் பாய்ந்து
நோய் தீர்த்தாள்..!!!

☆

வெட்டிய மரத்தின்
உயிரில்லா விதைகளுக்கு
தன்னை மண்ணில் மரித்து
உயிர் கொடுத்தாள் ..!!!

☆

குளம் குட்டைகளில் நிரம்பி
பாலையான விவசாயின்
கண்களை சோலையாக்கினாள்..!!!

☆

கட்டியிழுத்து வந்ததை
தங்க துகளாக்கி
கரையெங்கும் தூவி
கடல் அன்னையோடு கலந்தாள்..!!!

☆

கடமை முடியவில்லை
மேக கன்னிகளோடு
மீண்டும் வருவேனென்று

பருதியின் பார்வையிலே
உடன்கட்டை ஏறி
ஆவியாகி பறந்தாள்..!!!

☆

கடற்கரையில் தனி மரமாய்
நின்றிருந்தேன்
தோழியவளின் வருகைக்காக..!!

☆

## நீயும் நானும்

விடிகாலைப் பொழுதில்

ஆதவன் கதிர்க் கரங்கள்
நீட்டித் துயில் எழுப்பவே

விழி திறந்த நிமிடமதில்
நிழலாடும் உன் முகம்
ஏக்கத்தின் காத்திருப்பு

நினைத்த நிமிடத்தில்
விழிகளில் துளிர்ப்பாய்
கனவில் கூட இருப்பாய்

முகர்ந்து நுகர்கிறேன்
மணமாய் உணர்கிறேன்
மயங்கியே மறுகினேன்

உன்னை மறக்கவே
புதைத்து மறைக்கிறேன்
முளைத்துப் பரவுகிறாய்

தனிமையில் யுத்தமின்றி
விலகுகிறேன் இதயத்தில்
சத்தமின்றி துடிப்பாய் நீ

மனம் உன்னிடம் ஓயாமல்
கொட்டித் தீர்ப்பதால் வாய்
வார்த்தைகள் மவுனமாகிறது

வீட்டு வாசலில் உப்பு
படிந்திருப்பதாக பலர் புகார்
தெளித்தது விழி நீர் அல்லவா

உன் நினைவின் ஆனந்தமும்
உன் பிரிவால் வரும் வலியும்
தருவது கண்ணீர் மட்டுமே

அஞ்சுகிறேன் என் கண்ணீரில்
மூழ்கியே மூச்சடைத்து
செத்து விடுவேனோ என்று

வரத் துடிக்கும் வார்த்தைகளை
நசுக்கி நசுக்கியே ஒருநாள்
குரல்வலை நசுங்கிச் சாவேன்

உன் நினைவு ஜுவாலைகளாய்
என்னைச் சுற்றிச் சூழ்ந்தாலும்
விரும்பியேக் கருகிச் சாவேன்

வாழச் சேர்ந்த உறவல்ல
வாடிப் போக நாம் மலரல்ல
ஒரு துடிப்பின் இரு உயிர்கள்

விழிகள் கண்ணீரை ருசித்து
உயிரின் தாகம் தீர்த்துவிடும்
பார்வைகள் பசியாற்றிவிடும்

நினைவும் கனவும் மட்டுமே
நம் உறவைத் தாலாட்டி
மடியில் உறங்க வைக்கும்

தூய்மைக்குத் தாய்ப்பாலாம்
மாசில்லா அன்புக்கு நாம்
நானும் நீயும் மட்டுமே ...

**- பாண்டிமா -**

*"மின் இதழை படித்து இரசித்தமைக்கு நன்றிகள்"*

*தங்கள் பதிவுகள் மின் இதழை சிறப்பிக்க வேண்டுமா? தங்கள் பதிவுகளும் மின் இதழில் பங்கு பெற்று சிறப்பிக்க நாங்கள் விரும்புகிறோம்.*

1. *தளத்தில் சிறப்புப்பதிவாக தெரிவு செய்யப்படும் படி சிறந்த கருத்தை வைத்து பதிவுகளை எழுதுங்கள்*
2. *அதிக புள்ளிகள் பெற்று முதல் இருபது பதிவுகளுக்குள் தங்கள் பதிவுகள் வருமாறு சிறந்த கருத்துகள் கொண்ட பதிவு செய்யுங்கள்.*
3. *வேறு இடங்களில் பதியப்படாத பதிவுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.*

*மீண்டும் வழக்கம் போல அடுத்த மின் இதழில் சந்திப்போம்.*

*இதழையும் தமிழ் நண்பர்களையும் பற்றிய தங்கள் மேலான கருத்துகளை தயவு செய்து* info@tamilnanbargal.com *என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.*

நன்றிகள்
தமிழ் நண்பர்கள்
tamilnanbargal.com

இம் மின்இதழ் தமிழ் நண்பர்கள்
சார்பாக ஒவ்வொரு தமிழ்
மாதமும் இலவசமாக
வெளியிடப்படும் இதழ் ஆகும்.

இதழ் சம்பந்தமான
பரிந்துரைகளுக்கோ அல்லது
விளம்பரங்களுக்கோ
info@tamilnanbargal.com என்ற
முகவரிக்கு அஞ்சல் செய்யவும்.

இம்மின் இதழை பதிவுகள் எழுதி
சிறப்பித்த அனைத்து
நண்பர்களுக்கும் எங்கள்
நன்றி நன்றி நன்றி!



**tamilnanbargal.com**